குருவுக்கு மேஷமும்-விருச்சிகமும்
சுக்கிரனுக்கு கர்க்கடகமும்-சிங்கமும்
சனிக்கு கர்க்கடகம்-சிங்கம்-விருச்சிகமும்
இராகுக்கு மிதுனம்-துலாம் தனுசு-கும்பம்,மீனமும்
கேதுக்கும் குளிகனுக்கும் மேஷம்-மிதுனம்-சிங்கம்-கன்னி
தனுசும் பகைவீடாம்

## இராசிகளுக்குக் கிரபெலன்

| ராசி | பாபர் | சுபர் | மாரகர் | யோகர் |
|---|---|---|---|---|
| மேஷம் | ச-சு-பு | கு-ர | ச-பு | ச-சம்மகு |
| ரிஷபம் | கு-சு-ம | ச-ர | கு-சு-ம | சனி |
| மிதுன | செ-கு-ர | சு | செ-கு-ர | |
| கர்க் | சு-ச-ம | செ-கு | சு-ச-ம | செ |
| சிங்கம் | சு-பு | செ | சு-பு | செ |
| கன்னி | செ-கு-ம | சு | செ-கு-ம | சு-பு |
| துலாம் | கு-ர-செ | ச-பு | கு-ர-செ | ம-பு |
| விருச்சி | பு-செ-சு | ம | பு-செ-சு | ர-ம |
| தனுசு | சு | செ-ர | ம-சு-கு-ச | ர-பு |
| மகரம் | கு-ம-செ | சு-பு | கு-ம-செ-ர | சு |
| கும்பம் | கு-ம-செ | சு | ம-செ-ர-பு-ச | சு |
| மீனம் | ச-சு-பு-ர | செ-ம | ச-சு-பு-ர | செ-கு |

## மறுமையிலடையுமிடம்

12-ம் அதிபதியோடு குருவாவது சுக்கிரனுவது இவ் விருவமாவது கூடின் தெய்வலோகம்.

சூரியன் கூடின் இராஜலோகம்
சந்திரன் கூடின் பிதுர்லோகம்
செவ்வாய் கூடின் வீரசொர்க்கம்.

சனியாவது பாம்புகளாவது சனியுடன பாம்புகளி லெகருவருமாயாவது கூடின் இயமலோகம்.

புதன் கூடின் வேண்டுமென்று விரும்புமிடங்களில் சேர்வர்.

## கிரகநித்தியகதி.

| கிரகம் | பாகை | கலை | விகலை |
|---|---|---|---|
| சூரியன் | 0 | 59 | 8 |
| சந்திரன் | 13 | 10 | 35 |
| செவ்வாய் | 0 | 31 | 26 |
| புதன் | 4 | 5 | 33 |
| குரு | 0 | 4 | 59 |
| சுக்கிரன் | 1 | 36 | 8 |
| சனி | 0 | 2 | 0 |
| இராகு | 0 | 3 | 11 |
| துங்கன் | 0 | 6 | 41 |

இந்த நித்தியகதிகளை ஒரேஜாதியாக விகலையாக்கி உதயாதி ஜனனகாலவரை கழிந்தநாழிகை விநாடிகளை ஒரேஜாதியாக விநாடியாக்கி ஒன்றுக்கொன்று பெருக்கின பெருக்குத் தொகை விதர்ப்பரைகளாகும். இதை மேலின மாகமாற்றிக்கண்ட ராசிபாகை கலைகளை கிரகஸ்புடஞ் செய்கையில் அந்தந்தக் கிரகங்களின் ஸ்புடங்களில் லத்திருவங் கூட்டுவதற்குமுன் கூட்டவும்.

விதர்ப்பரை 60-க்கு தர்ப்பரை-1

தர்ப்பரை 60-க்கு விகலை-1

விகலை 60-க்கு கலை-1

கலை 60-க்கு பாகை-1

பாகை 30-க்கு இராசி-1 எனவறிக.

## கிரகங்களின பலமகாலமு மிடமும்.

அசுரர்க்கு தக்ஷிணாயனத்திலும்-அமரபட்சத்திலும்
சுபர்க்குஉத்தராயனத்திலும்-பூர்வபக்கத்திலும்பலம்
புதனும்-குருவும் லக்கினத்திலும்
சுக்கிரனும்-சந்திரனும் நான்கிலும்
சனியும்-இராகுவும் ஏழிலும்
சூரியன்-செவ்வாய் பத்திலும் வலியராம்.

ஒன்று-உதயம், நான்கு-நீர்க்கீழ், ஏழு-அத்தமனம், பத்து-உச்சம்.

புதனுக்கு செவ்வாய் வலியன்
செவ்வாய்க்கு சனி வலியன்
சனிக்கு குரு வலியன்
குருவுக்கு சுக்கிரன் வலியன்
சுக்கிரனுக்கு சந்திரன் வலியன்
சந்திரனுக்கு சூரியன் வலியன்
சூரியனுக்கு இராகு வலியனும்.

## கிரகங்களின் சுபக்கணக்கு.

| | |
|---|---|
| பூர்ணசந்திரன்-குரு | முழுச்சுபார் |
| சுக்கிரன் | முக்காற்சுபன் |
| புதன் | அரைச்சுபன் |
| குறைந்தசந்திரன் | காற்சுபன் |
| சந்திரன் அமாவாசையிற் புதனோடு கூடின் | முக்காற்சுபர். |

## கிரகங்களின் பாபக்கணக்கு.

| | |
|---|---|
| சனி-இராகு | முழுப்பவர் |
| செவ்வாய் | முக்காற்பாவி |
| சூரியன் | அரைப்பாவி |
| பாம்புகளோடுகூடிய புதனு-மதியும் | காற்பாவா |

இராகுவோடுகூடிய குரு முழுப்பாவியாம்.

## நட்பாட்சி யுச்சபலன்.

உச்சம்-$1\frac{1}{4}$, கேந்திரம்-1, ஆட்சி-$\frac{3}{4}$, நட்பு-$\frac{1}{2}$, நீச்சம்-$\frac{1}{4}$ பலமாகும்.

## திசைகள் விபரம்.

### (1) மகாதிசை.

| | |
|---|---|
| அச்சுவினி-மகம்-மூலம் | கேதுதிசை வரு-7 |
| பரணி பூரம்-பூராடம் | சுக்கிரதிசை வரு-20 |
| கார்த்திகை-உத்தரம்-உத்திராடம் | சூரியதிசை வரு-6 |
| ரோகணி-அஸ்தம்-திருவோணம் | சந்திரதிசை வரு-10 |
| மிருகசீரிடம்-சித்திரை-அவிட்டம் | குசன்திசை வரு-7 |
| திருவாதிரை-சோதி-சதையம் | இராகுதிசை வரு-18 |
| புனர்பூசம்-விசாகம்-பூரட்டாதி | குருதிசை வரு-16 |
| பூசம்-அனுஷம்-உத்திரட்டாதி | சனிதிசை வரு-19 |
| ஆயிலியம்-கேட்டை-ரேவதி | புதன்திசை வரு-17 |

ஆக மகாதிசை 9-க்கு வரு-120.

(2) உற்பன்னதிசை ஜென்ம நட்சத்திரத்துக்கு 6-வது நட்சத்திரதிசை

(3) மிருத்தியுதிசை 3-வது நட்சத்திரதிசை

(4) பிராணதிசை சூரியஸ்புடத்தில் கண்ட நட்சத்திர திசை

(5) ஆதானதிசை 8 வது நட்சத்திரதிசை

(6) வாமதிசை இடமாக 4-ம் நடசத்திரதிசை

(7) உடுதிசை சந்திர சூரியருடைய ஸ்புடங்களைக்கூட்டிக்கண்ட நட்சத்திரதிசை

(8) நிரியாணதிசை சனிஸ்புடத்திற்கண்ட நட்சத்திர திசை.

(9) மகாபிராணதிசை சந்திர சூரிய லக்கினஸ்புடங்களைக் கூட்டிக்கண்ட நட்சத்திரதிசை-

(10) குளிகநிரியாணதிசை, குளிகஸ்புடத்தை 9-ல் பெருக்கி விகலை 60-க்கு 1-ம் கலை 60-க்கு 1-ம் பாகை 30-க்கு 1-மாகக்கோடிகூட்டி இராசி தானத்தில் நின்ற இராசிகலை 12-ல் கழித்து இராசி-பாகை-கலை-விகலையாக நிறுத்திச் சந்திரஸ்புடங்கூட்டிக்கண்ட நட்சத்திரதிசையுமாக மகாதிசைபோலக்கொள்க.

(11) காவசக்கரதிசை

| | |
|---|---|
| மேஷ-விருச்சிகம் | செவ்வாய்திசை ஞு-7 |
| ரிஷப-துலாம் | சுக்கிரதிசை ஞு-16 |
| மிதுன-கன்னி | புதன்திசை ஞு-9 |
| கர்க்கடகம் | சந்திரதிசை ஞு-21 |

சிங்கம் — சூரியதிசை ௵-5
தனுசு-மீனம் — குருதிசை ௵-10
மகர-கும்பம் — சனிதிசை ௵-4

ஆக ௵-118.
ஆக 15.

வலவோட்டு நட்சத்திரங்கள்

| | | |
|---|---|---|
| அச்சுவினி | ஆயிலியம் | பூராடம் |
| பரணி | அஸ்தம் | உத்திராடம் |
| கார்த்திகை | சித்திரை | பூரட்டாதி |
| புனர்பூசம் | சோதி | உத்திரட்டாதி |
| பூசம் | மூலம் | ரேவதி |

இடவோட்டு நட்சத்திரங்கள்

| | | |
|---|---|---|
| உரோகணி | பூரம் | கேட்டை |
| மிருகசிரம் | உத்திரம் | திருணவோம் |
| திருவாதிரை | விசாகம் | அவிட்டம் |
| மகம் | அனுஷம் | சதையம் |

ஆக 12

வலவோட்டு நட்சத்திரங்கள் மூன்றின் பாதம் 13-க்கும்- மேஷமுதல் வலமாகவும் இடவோட்டு நட்சத்திரங்கள் 12-க்கும், விருச்சிகமுதல் இடமாகவும் கொள்ள வேண்டும்.

காலசக்கரபுத்திகளின் விவரம்

வலவோட்டு நட்சத்திரங்களுள்,

| | |
|---|---|
| அச்சுவினி | சோதி |
| கார்த்திகை | மூலம் |
| புனர்பூசம் | உத்திராடம் |

ஆயிலியம் பூரட்டாதி
அஸ்தம் ரேவதி

என்னும் பத்து நட்சத்திரங்களுக்கும்.

1-ம் பாதம்;—மேஷம்-ரிஷபம்-மிதுனம் - கர்க்கடகம்-சிங்கம்-கன்னி-துலாம்-விருச்சிகம்-தனுசு-இவை 9-க்கு ஷ-100.

2-ம் பாதம்:—மகரம்-கும்பம்-மீனம்-விருச்சிகம் - துலாம்-கன்னி-கர்க்கடகம்-சிங்கம் மிதுனம் இவை 9-க்கு ஷ-85.

3-ம் பாதம்:—ரிஷபம் - மேஷம் - மீனம் - கும்பம் - மகரம் தனுசு - மேஷம் - ரிஷபம் - மிதுனம் இவை 9-க்கு ஷ-83.

4-ம் பாதம்:—கர்க்கடகம்-சிங்கம்-கன்னி - துலாம்-விருச்சிகம்-தனுசு - மகரம் - கும்பம் - மீனம் இவை 9-க்கு ஷ-86.

இதுவும் வலவோட்டு நாள்களுள்,

பரணி-பூசம்-சித்திரை-பூராடம்-உத்திரட்டாதியென்னும ஐந்து நட்சத்திரங்களுக்கும்.

1-ம் பாதம்:—விருச்சிகம்-துலாம்-கன்னி- கர்க்கடகம்-சிங்கம்-மிதுனம்-ரிஷபம்-மேஷம்-மீனம் இவை 9-க்கு ஷ-100.

2-ம் பாதம்;— கும்பம்-மகரம்-தனுசு-மேஷம்-ரிஷபம்-மிதுனம்- கர்க்கடகம் - சிங்கம் - கன்னி - இவை 9-க்கு ஷ-85.

3-ம் பாதம்:—துலாம் - விருச்சிகந் - தனுசு-மகரம்-கும்பம் மீனம்-விருச்சிகந் - துலாம் - கன்னி இவை 9-க்கு ஷ 83

4-ம் பாதம்:—கர்க்கடகம் - சிங்கம் - மிதுனம் - ரிஷபம் மேஷம்-மீனம்-கும்பம்-மகரம்-தனுசு இவை 9 க்கு ஷ-86

## இடவோட்டு நாள்களுள்.

உரோகணி-மகம்-விசாகம் - திருவோணம் - என்னும் நான்கு நட்சத்திரங்களுக்கும்.

1-ம் பாதம்:—தனுசு-மகரம்-கும்பம் - மீனம் - மேஷம்-ரிஷபம்-மிதுனம் - சிங்கம் - கர்க்கடகம் இவை 9-க்கு ஷ-86.

2-ம் பாதம்;—கன்னி - துலாம்-விருச்சிகம்- மீனம்-கும்பம் மகரம் - தனுசு - விருச்சிகம்-துலாம் இவை 9-க்கு ஷ-83.

3-ம்பாதம்:—கன்னி-சிங்கம் - கர்க்கடகம்-மிதுனம்-ரிஷபம் -மேஷம்-தனுசு - மகரங்-கும்பம் இவை 9-க்கு ஷ-85.

4-ம்பாதம்:—மீனம்-மேஷம் - ரிஷபம்-மிதுனஞ் - சிங்கங்-கர்க்கடங்-கன்னி-துலாம்-விருச்சிகம் இவை. 9-க்கு ஷ-100 .

## இதுவும் இடவோட்டு நாள்களுள்.

மிருகசிரம் - திருவாதிரை - பூரம்-உத்திரம்- அனுஷங்-கேட்டை-அவிட்டம்-சதயம் என்னும் எட்டு நட்சத்திரங்களுக்கும்.

1-ம் பாதம்:—மீனம் - கும்பம் - மகரம்-தனுசு-விருச்சகம்-துலாங் - கன்னி-சிங்கங்-கர்க்கடகம் இவை 9-க்கு வரு-86.

2-ம் பாதம்:—மீனம் - ரிஷபம்-மேஷம்-தனுசு-மகரம்-கும்பம்-மீனம்-மேஷம்-ரிஷபம்-இவை 9-க்கு வரு-83.

3-ம் பாதம்:—மிதுனம்-சிங்கம்-கர்க்கடகம்-கன்னி-துலாம் விருச்சிகம் - மீனம் - கும்பம்-மகரம் இவை 9-க்கு வரு-8".

4-ம் பாதம்:—தனுசு - விருச்சிகம் - துலாம்-கன்னி-சிங்கம் கர்க்கடகம்-மிதுனம்-ரிஷபம்-மேஷம் இவை 9-க்கு வரு-100.

இவ்வாறு அந்தந்த இராசியின் அதிபதிகளுக்கு கால சக்கர திசைக்குச் சொல்லியிருக்கிற வருஷக்கணக்கின் படி கொள்ளவேண்டும்.

மகாதிசைக்குப் போதகன் முதலியோர்.

இராகு கேதுகளுக்கு இவை இல்லையாம்.

| மகா திசை. | போதகன் | வேதகன் | பாசகன் | காரகன் |
|---|---|---|---|---|
| சூரியதிசைக்கு | செவ்வாய் | சுக்கிரன் | சனி | குரு |
| சந்திரதிசை | செவ்வாய் | சூரியன் | சுக்கிரன் | சனி |
| செவ்வாய்தி | சந்திரன் | புதன் | சூரியன் | சனி |
| புதன்திசை | குரு | செவ்வா | சந்திரன் | சுக்கிரன் |
| குருதிசைக்கு | செவ்வாய் | சூரியன் | சனி | சந்திரன் |
| சுக்கிரதிசை | குரு | சனி | புதன் | சூரியன் |
| சனிதிசைக்கு | சந்திரன் | செவ்வா | சுக்கிரன் | குரு |

கவி.

கூறுபலனைக்கொடுவென் பான்போதகனும்
வேறுபண்ணித்தட்டுவிப்பான் வேதகனும் தேறுபலன்
கூட்டுவிப்பான்பாசகனுங்கோலமகாதினைசக்கே
சுட்டுபொருள்காரகனிவான்

கோட்சாரத்தில் பார்வைகாலம்.

சூரியனுக்கு நாள்-5,
புதனுக்கும்-சுக்கிரனுக்கும் தனித்தனிநாள்-7,
செவ்வாய்க்கு நாள்-8,
குருவுக்கு மீ-2.
இராகு-கேதுக்கு தனித்தனி மீ-3

கவி

சோசாரப்பார்வைபுந்திபுகர்க்குநாளேழதாகும்
காசுறுசேய்க்கோரெட்டுக்கதிர்க்குநாளைந்ததாகும்
மாசில்பொன்னிரண்டுதிங்கண்காசுணமதிமூன்றுகும்.
வீசுகன்மாதமாறும்விரிதிங்கள்மூன்றுகன்னல்

கோட்சாரபலன்

சூரியன்-1-4-5-7 8-9-12-இந்த இடங்களில் நின்றல் நல்ல பலனைக்கொடுப்பன்.

கவி

சூரியஜன்மந்தன்னிற் றலங்கியநாலேழைந்தில்
பாரியவெட்டோன்பானிற்பகர்ந்தபன்னிரண்டினி
காரியக்கேடலைச்சல் கண்வலிதலைநோக்காடு [ன்றல்
வீரியவெறுவீடாக்கி வீடுவிட்டோடுமென்றே.

கவி

பனிமதியிரண்டிநான்கிற் பரிவிலாவாறிவெட்டிற்
கனமறுபன்னிரண்டிற் கதிக்கவீற்றிருந்தானாகில்
இனியநற்பெண்டீர்மக்களியல்பறக்கேடுதுக்கம்
தனமதைச் செலவழித்தல் தான்கொடுத திடுவன்றானே

செவ்வாய் 1-2-4-8-10-12-ல் நின்றால் நல்லபலனைக் கொடான்.

கவி

நிலமகன்ஜன்மந்தன்னி னிலவியவிரண்டினாகில்
நலமறுமெட்டிற்பத்தி னாட்டுபன்னிரண்டினின்றால்
பலவிதக்கேடுபெண்டீர் பதிபொருணாசம்வெப்பு
குலவியவாயுதத்தாற் குணகுலப்பதியும்போக்கும்.

புதன் 1-3-5-7-8-9-12-ல் நின்றால் நல்லபலனைக் கொடான்.

கவி

புத்திதான்ஜென்மந்தன்னிற்புதியமூன்றைந்திலேழில்
உந்திய வெட்டொன்பானி லுகந்தபன்னிரண்டினின்றால்,
சிந்தையே தகமாம்வித்தை திரவியங்களவுபோகும், கொந்
தலர் குழலாள்சேதங் கோளினால் குற்றமாமே

குரு 1-3 4-8-10-12-ல் நல்லபலன் கோடான்.

கவி

பொன்னவன்ஜன்மந்தன்னிற்பொருந்தியமூன்றினாகில்,
வின்னமாமெட்டிற்பத்தில் விளங்கு பன்னி
ரண்டி னின்றால், தன்னுடன் பிறந்தார். குற்றந்தானிய
மாடுமக்கள் வின்னமான் பதியும்விட்டு வெறுப்பதாயிருக்
குந்தானே.

ஜென்மராமர்வனத்திலே சீதையைச்சிறைவைத்தும்
தீதிலாதொருமூன்றிலேதுரியோதனன்படமாண்டதும்
இன்மையெட்டினில்வாலிபட்டமிழந்துபோம்படியானது
ஈசனுமொருபத்திலே தலையோட்டிலேயிரந்துண்டதும்
தன்மபுத்திரர்நாலிலேவனவாசமப்படிப்போனதும்
சத்தியமாமுனியாறிலேயிருகாலிலேதளைபூண்டதும்
வன்மையுற்றிடராவணன்முடி பன்னிரண்டினில்வீழ்ந்ததும்
ம்ன்னுமாகுருசாரிமாமனை வாழ்விலாதுறுமென்பவே.

சுக்கிரன் 3-6-8-12-ல் நின்றால் நல்லபலன் கொடான்.

கவி

சுக்கிரன்மூன்றிலாறில் துலங்குமெட்டாமீராறில்
உக்கிரமாகவேதா னுகந்தநட்பிள்றிநின்றால்
மக்கள்நல்மாடுபெண்டீர் வரிசையாயுரைத்தாற்கேடு
சிக்கியபொருள்களுஞ்சந் திரவியங்களவுபோமே.

சனி 1-2-4-5-8-10-12-ல் நின்றால் நல்ல பலன்கொடான்.

கவி

முடவன்றான் ஜன்மைந்தில் முன்னியவிரண்டுநான்கில்
திடமாறு மெட்டிற்பத்திற் சேர்ந்தபன்னிரண்டினின்றால்
உடன்மன்னர் பொருள்மாடாடுபெண்டணி மக்கள்சேதம்
அருமையும் பதியும்விட்டேயரசரா லலைச்சலாமே.

இராகு-கேது 1-3-4-6-8-10-12-ல் நின்றால் பலன்கொடான்

கவி.

ராகுவுங்கொடியகேதும் நலமிலாச்சென்மந்தன்னில்
வகமாமூன்றிநான்கி லெழிமாறிகலட்டிநிற்பத்தில்

வேகமாம்பன்னிரண்டில் வேண்டியேவந்துநின்றால்
பாகுநேர்மொழியாள்மக்கள்பதியுடனழியுந்தானே.

இதுவுங் கோட்சாரபலன்.

பலர் ஒப்புக்கொண்ட ஷை பலன்கள்
சூரியன் *3-6-10-11*-ல் வரில் சுபபலன்.

கவி.

நாயிறுமூன்றுமாறு நற்பதினென்றும்பத்தும்
ஏயுறுமிவ்விடங்க ளிருந்திடிற்செல்வமுண்டாம்
ஈய்தலுமிறக்கமுண்டாம் எதிரியைவெல்லலாகும்
சேயதுதரிக்கும்பேருந் தீராய்நோய்தீருந்தானே

சூரியன் *1-2-4-5-7-8-9-12*-ல் வரின்துர்ப்பலன்.

கவி.

சூரியன் சென்மமைந்திற் றுலங்கிய நான்கில்ரெண்டில்
பாரிய வேழெட்டோன்பான்பகர்ந்தபன்னிரண்டினின்றால்
காரியக் கேடலைச்சல் கனவுகண் தலைநோயுண்டாம்
வீரிய வெதுப்புநோய்கள் வீடுவிட்டோட்டுமன்றே

சந்திரன் *1-3.6-7-10-11*-ல் வரில் சுபபலன்

சந்திரன் மூன்றொன்றுஞ் சார்பத்துப் பன்னொன்றேழும்
இந்திரன் போலவாழ்வ னெதிரிமார்பாணியாவன்
தந்திர வாதியாவன் சந்தாதானபாக்கியனவன்
மந்திரவாதியா வன்வயித்திய வாதனுமே.

*2-4-5-8-9-12*-வான் துர்ப்பலன்.

கவி. [கின்

பிறைபனிரெண்டொன்பானெட்டிரண்டுநான்கைந்தினிற்
சிறையுளான் கிலேசமுள்ளான்திருடுவன்தீங்குசெய்வான்

நிறையிலா னன்றியில்லானிட்டுர னிதியில்லான் [ன்
முறையிலான் வணக்கமில்லான் மூதேவிக் குறையுளாவா

## செவ்வாய் 3 6-11-ல்வரின் சுபபலன்.

தண்பதினொன் றுமாறுந் தன்னுடன்மூன்றும்வீட்டில்
திண்குச னிற்கிற் றீர்க்க வயதுட னீகையுள்ளான்
பெண்கலியாணமுண்டாம் பிள்ளைப்பாக்கியமுண்டாகும்
மண்பனை பயிருமுண்டாம் வாழ்வுகள் மிகவுண்டாமே.

## செவ்வாய் 1-2-4-5-7-8 9-10-12-ல் வரின்துர்ப்பலன்.

கவி.

எழுகுசன் பன்னொன்றுறு மூன்றலாவிடங்கள் சேரிற்
றெழுகமுவிலங்கு தூண்டில் தூக்குமே வருவதோடு
இழுபறி மானபங்க மில்லாத தொடுவழக்கு
அழுகையு மேல்மேற்றுக்க மாங்குச னுலுண்டாமே.

## இராகு 3 6-11-ல் வரின் சுபபலன்.

கவி.

இராகுபன் னொன்றுமூன் றுறதாமிடத்திற்சேரின்
பாகுதேன் பழமும்பாலும் பற்றத்தனமு முண்டாம்
ஆகுங்காரியங்களுண்டா மன்னதானமு முண்டாகும்
வாகுவைப்பாட்டியுண்டாம்வரத்துமேல்வரத்துண்டாமே.

## இராகு 1-2-4-5-7-8 9-10-12-ல் வரின்தர்ப்பலன்.

கவி.

ஐந்துபத் தொன்றீராறே ழாமிரண் டீரிரண்டோ
டொன்பது மெட்டுமாயி னுடம்பினிற் பிணியுண்டாகும்

மன்னருள் போகும்பார்த்த வயித்தியனாலே மோசம்
தன்பதி போக்கும்நல்ல சகோதரஞ் சத்துருவாமே.

குரு 2-5-6 9-11-ல் வரின் சுபபலன்.

கவி.

பெருபதினொன் றைந்தேழ்பே ரொன்பதாமிரண்டிற்றேவ
குருவரிற் செல்வஞ்சீரூர் குதிரை வெண்குடைதிவர்த்தி
தருமமுந் தானமுண்டு தாய்தந்தை துணையுமுண்டு [மே
அருமையும் பெருமை யுண்டாமரசர் சேவையு முண்டா

குரு 1-3-4-6-8-10-12-ல் வரின் துர்ப்பலன்-

கவி.

பத்துடன் மூன்றுநான்கு பன்னிரண் டெட்டோடுற்ற
மத்திமமாறிலொன் றின் மன்னவனிருந்தகாலை
சித்தமுமலைச்சறத்து சிட்டூரம் வாதபித்தம்
பெற்றவள்பிறப்புப்பிள்ளை பெண்சாதி பகையுமாவர்

சனி 3-6-11-ல் வரின் சுபபலன்.

கவி.

ஆறுபன் னொன்பான்மூன் றி லந்தகனிருக்கிற்பாக்கியம்
கூறுபே ருருமுண்டாங் குறைவிலாச்செல்வமுண்டாம்
ஏறுபல்லக்குமுண்டா மிடம்பொருளேவலுண்டாம்
காறுபா லட்டலக்குமி கடாக்ஷமு முண்டாமன்றே.

சனி 1-2-4-5-7-8-9-10-12 ல் வரின் துர்ப்பலன்

கவி.

பனிரெண்டே ழெட்டொன்பான்பத் தைந்து நான் கரன்
[டொன்றிற்றன்
சனியனே யிருந்தானட்டந் தனமுயிர்ச் சேதமாகும்

தனிச்சிறை மானபங்கந் தன்னறி வாலேமோசம்
மனைவிட்டு மாடுவிட்டு மறுநக ரேகுவாரே.

புதன் 2-6-8-10-11-ல் வரின் சுபபலன்.

கவி.

பதுவுட னிரண்டெட்டாறு பன்னொன்றுமாமிடத்திற்
புதனிருந் தக்காலன்மென்மேல் புத்தியுமியோகமுண்டாம்
சுதனுமேல் சுதனுமுண்டாஞ் சுற்றமுஞ் சுகமுமுண்டாம்
ரதகச துரகஞ்சேனை நாலுமே மிகவுண்டாமே.

புதன் 1-2-?-4-5-7-9-12-ல் வரின் துர்ப்பலன்.

கவி,

சாலொன்பதொன்றுமூன்றுசார்ந்துமேழைந்திராறு
நாலினிற் புதனிருந்தால் நலமில்லைமிடியுந் துன்பம்
தோலினிலரிப்புமுண்டாந் துக்கமுந் தூதுமுண்டாம்
லேலினிற்பிடிப்புமுண்டாங்கிள மானபங்கமென்றே.

கேது 3-6-11-ல் வரின் சுபபலன்.

கவி.

கேள்பதினொன்றுமாறு நேர்மூன்றிற்கேதிருந்தால்
தாள்விலாப்பயிருமுண்டு தனபாக்கியமதிகமுண்டு
சூழ்புவி யெங்கும்போம் சென்னசொல் சற்றுந்தப்பா
வாழ்வின்மேல் வாழ்வுண்டாகி மகராசனுவான்றானே,

கேது 1-2-4-5-7-8-9-10-12-ல் வரின் துர்ப்பலன்

கவி

கேதுநான்கைத்தெட்டோன் பான்கிட்டியீவரந்திண்டேழ்
தீதுபன் னிரண்டி லொன்றுற்சசித்திரள் கிலேயுந்தீகாம்
சூதுடன் மயிர்களைந்து சுடுபட்டுச் சொரூபமாறிச்
சேதுடன் காசிதேசந் தேசாந்திரம் போவன்றுனே.

சுக்கிரன 1-2-3-4-5-8-9-11-12-ல் வரின் சுபலன்.

கவி

வெள்ளியோ ராறுமேழும் விளங்கு பத்தலாவிடத்தில்
அள்ளிய செம்பொனுண்டா மன்னதானங்களுண்டாம்
வெள்ளியுஞ்செம்புமுண்டாம்வித்தையும்புத்தியுண்டாம்
தெள்ளிய மொழியுமேற்றிறமையுந் திருவுண்டாமே

சுக்கிரன் 9-7-10-ல் வரின் துர்ப்பலன்.

கவி

சங்கிரமாறுமேழு மோர்பதுபதிகடன்னில்
சுக்கிர னிருந்தக்காலே துனபமுந் தொல்லையுண்டாம்
துக்குறி மனக்கிலேசஞ் சோர்வுடன் சொறியுமுண்டாம்
வக்கிரம் பிடித்தாப்போலே மயக்கமே மிகவுண்டாமே.

கோட்சாரவேதை.

சந்திர லக்கனத்துக்கு சூரியன் 5 லும் சந்திரன் 8 லும் செவ்வாய் 7 லும் புதன் 4 லும் குரு 3 லும் சுக்கிரன் 6 லும் சனி 1-லும், ராகு 9-லும் கேது 2 லும் இருந்தால் கோசரத்தில் நல்லபலனைக் கொடுக்கமாட்டார்கள்.

இதுவும் சந்திரலக்கனத்துக்கு 11-3-10-6-ல் சூரியனிருக்க முறையே 5-9-4-12-ல் கிரகமில்லா மலிருந்தால் தானிருந்த ராசிப்பலனைக்கொடுப்பான்.

1-3-6-7-10-11-ல் சந்திரனிருக்க முறையே 5-912-2-4 8-ல் கிரகமில்லாமலிருந்தால் தானிருந்த ராசிப்பலனைக் கொடுப்பான்.

3-6-11-ல் செவ்வாய்-சனி-ராகு- இருக்கமுறையே 12 9-5-ல் கிரகமில்லாமலிருந்தால் தானிருந்தராசிப் பலனைக் கொடுப்பார்.

2-4-6-8-10-11-ல் புதனிருக்க முறையே 5-3-9-1-8-12-ல் கிரகமில்லாமலிருந்தால் தானிருந்த ராசிப் பலனைக்கொடுப்பான்.

11-9-7-5-2-ல் குருவிருக்க முறையே 8-10-3-4-12-ல் கிரகமிருந்தால் தானிருந்தராசிப்பலனைக் கொடுப்பான்.

11-12-2-8-1-4-3-5-9-ல் சுக்கிரனிருக்க முறையே 3-6-7 5-8-10-1-9-11-ல் கிரகமில்லாமலிருந்தால் தானிருந்தராசிப் பலனைக் கொடுப்பான்.

## விபரீத தேவதை.

சந்திரலக்கினத்துக்கு 5 - 9 - 4 - 12-ல் சூரியனிருக்க முறையே 11-3-10-9-ல்வேறுகிரகமிருந்தால் சூரியன் நல்ல பலனைக்கொடுப்பான்.

இவ்வாறே மற்றக் கிரகங்களுக்கும் கோசாரவிபரீத வேதை பார்த்துக்கொள்ளவும்.

சூரியனும் செவ்வாயும் முற்பங்கிலும்
குருவும் சுக்கிரனும் நடுப்பங்கிலும்
சனியும் சந்திரனும் கடைப்பங்கிலும்
புதனும் பாம்புகளும் எப்போதும் பலன் தருவார்.

## மாதா பிதாவுக்கு அரிஷ்டநாள்

பூராடம் முதற்காலும், பூசத்தின் 2 ங் காலும் 3 ங் காலும், சித்திரையின் முதற்காலும் 2 ங் காலும், உத்திரத்தின் முதற்காலும் மாதாபிதாவுக்கரிஷ்டமாம்.

## பிதாவுக்கு அரிஷ்டநாள்.

ஆயிலியம பூராடம் 3 ங்காலும், உத்திராடம் ரேவதி 2 ங்காலும், உத்திரம் அனுஷம் முதற்காலும் அவிட்டம் 4 ங்காலும் பிதாவுக்கரிஷ்டமாம்.

## மாதாவுக் கரிஷ்டநாள்.

பூசம் ஆயிலியம் மகம் சித்திரை பூராடம் உத்திராடம் ரேவதி முதற்காலும், உத்திரம் விசாகம் 2 ங் காலும், மாதாவுக்கரிஷ்டமாம்.

## பாட்டனுக்கரிஷ்டநாள்.

சித்திரை முதற்காலும் விசாரம் அனுஷம் மூலம் 4 ங்காலும் பாட்டனுக்கரிஷ்டமாம்.

## அம்மானுக் கரிஷ்டநாள்.

ரோகணி நக்ஷத்திரமுமுலபயும் சதயம் பூரட்டாதி முதற்காலும், மகம் 2 ங்காலும், அனுஷம் மூலம் 3 ங்காலும், பூராடம் 4 ங்காலும், அம்மானுக் கரிஷ்டமாம்.

## பூமிவசியநாள்.

பரணி திருவோணம் விசாகம் அஸ்தம் இந்த நக்ஷத்திரங்களில் நாலாம்பாதமும், கடகலக்னமும் செவ்வாய்க்கிழமையுங் கூடிய காலத்தில் மண்ணைத்தின்றால் பூமி பலிதமும்பூஸ்திதியும் உண்டாகும்.

கவி.

விருத்துவான் பரணியோணம் விசாகமோடத்தநாளில்
கருத்துடனுலாங்காலில் கடகம் வந்துற்றபோது
திருத்தியசேய்நாள் மண்ணைத் தின்றிடசெல்வமிஞ்சி
பொருத்தமும் புகழுமுண்டாய்ப் பூமியுந்தன்னதாமே.

விவாகம்

ஆடி மார்கழி புர்ட்டாசி மாசி மாதங்கள் தவிரமற்ற மாதங்களில் சுபர்வாரங்களில் உவா இருத்தை அஷ்டமீ நீங்கியதிதிகளில் மிதுனம் கும்பம் கர்க்கடகம் ரிஷபம் தனுசு கன்னி துலாம் என்னும் ராசிகளில் மூலம் ரேவதி மகம் சோதி மிருகசிரம் ரோகணி அனுஷம் உத்திரமூன்றும் அஸ்தம் இந்த நட்சத்திரங்களில் 3 11 ல் பாபக்கிரகங்களும் குரு சுக்கிரன் புதன் 6 8 அல்லாத மற்ற இடங்களில் பலத்திருக்க அல்லது ஒன்று ஏழுக்குடையவர் பலக்க குருபார்க்க 2 3 ல் சந்திரனும் இருக்க 7 ம் 8 ம் இடங்கள் சுத்தமாகிய லக்கனம் விவாகத்துக்கு உத்தமம்.

விவாகநாள்.

சூடுமாயோனுள் மூலம் ரேவதிமகமேசோதி
ஓடுமான்றலையுரோகணி யனுஷமுத்திரங்களத்தம்
கூடியநன்றுவாவோ டிருத்தையட்டமி தீயோர்நாள்
ஆடிமார்கழி புரட்டை மாசிதள்ளன்னமன்னுய்,
அன்னமேமிதுனங்கும்ப மலவனேடிடபம்வில்லு
கன்னிகோனன்றீராறு மூன்றினிற் கொடுங்கோணல்லர்

பொன்னவனெட்டிற்றீயன் புகர்புதனெட்டோர்காரி
இன்னவரேழிற்றீயர் மதிநல்லனிரண்டின்மூன்றே.

விவாகசக்கரம்.

எட்டுக்கோணமாக ஒருசக்கரங்கீறி அந்தச்சக்கரத்தினடுவில் சூரியன் நிற்கும் நட்சத்திரத்தையும் அதற்கு முன் நட்சத்திரத்தையும் பின் நட்சத்திரத்தையும் வைத்து தனக்கு எதிரைக் கிழக்காகக் கொண்டு வலமாக திக்கொன்றுக்குமும்மூன்றுநட்சத்திரமாகஎண்ணிக்கொண்டு வரும்போது நடுவிலும அக்கினி மூலையிலும் தெற்கிலும் மேற்கிலும் வாயு மூலையிலும் இருக்கும் நட்சத்திரங்கள் 15 ம் ஆகா. மற்ற 12 நட்சத்திரங்களும் உத்தமமாம்.

கவி.

தினகரனிருந்த நரண்முன்பின்னுளுஞ்
சேர்ந்திடு நடுவினில்வலமாம்
அனலவன்மூலை முதலதாமெட்டிற்
கடைவுடன் மூம்மூன்றுநாளாய்
மன்னுறவெண்ணி லக்கினிதெற்கு
வருணனும் வாயுவுநடும்
எனவருபதினைந் தென்னுமந்நாட்க
டீதெனவிளம் பினர்மேலோர்.

கவி

வட்டமதி விரவிநின்ற முன்னும்பின்னும்
வளமாக விவாகமது முடிப்பிற்றீதாம்
திட்டமுடன் கிழக்கிலுள்ள மூன்றுநன்று
திரள்வன்னி மூலையது தீதேயாகும்

நட்டமது தானுகும் யமனுர்மூலை
நலமுண்டா நிருதியது மேற்குச்சாவு
நொட்டபிணி நீங்காது வாயுமூலை
சுகம்பெறலாம் வடக்குமீ சானன்ருனே.

நிஷேகம்.

ருதுநாள் மூன்றும். ஞாயிறு-செவ்வாய்-சனி-பூரணை அமாவாசியை- அஷ்டமி - இருத்தை - ஜென்மநட்சத்திரம் ஜென்மவாரம் - பரணி-திருவாதிரை - ஆயிலியம்-மகம்-மூப்பூரம்-சித்திரை-ஜோதி-விசாகம் ஆகாவாம். 1-4-10-ல் சந்தரனும, 1-5-9-ல் குரு-சுக்கிரரும், 7-9-ல் புதனும, 3 6-11ல் பாபக்கிரகங்களும் இருப்பதும சரராசியும் லக்னசுத்தமும்உத்தமம்-

கவி.

திங்களிற்றிங்கண்முன்னுள் ஜென்மநாளேகாதேசி
மங்கையர் மூன்றுநாளும் வளர்பிறைமறைந்தநாளும்
பொங்குறுநவமிநாளும் பூவையைப்புணர்வீராயின்
அங்கமேநோவாமற்று மாருயிரிழப்பர்தாமே.

சீமந்தம்.

4-6-8 என்னும் இரட்டித்த மாதங்களில்வளர் பிறையில் சுபர்வாரங்களில் அமாவாசியை பூரணை நவமி நீக்கிய ஒற்றைத் திதிகளில் ரோகணி-மிருகசிரம-மூலைறுத்தரம்-அஸ்தம்-பூசம் முதலிய நட்சத்திரஙகளில் சிங்கம்-விருச்சிகம் நீங்கிய இராசிகளில ஏறுபொழுதில் ஆகாசம நிர்மலமாக இருக்கும்போது அஷ்டமசுத்தமான லக்கினத்தி மாயோன் பலியாகிய சீமந்தஞ் செய்யலாம்: பிராமணருக்கு 3-ம் மாதமுமாம்.

14

கவி. [ணம்

சொல்லுநான்காறெண்டிங்கடோணி மான்றலைபாவோர
புல்லுமுத்திரங்களத்தம்பூசங்கள் புகழ்கோள் வாரம்
நல்லவாமிரட்டைடக்க நவமியோடு வாதேள்சிங்கம்
அல்லவாஞ் கேமந்தத்திற் கட்டமசுத்தி நன்ரும்.

கிரகப்பிரவேசம்.

ஆனி-ஆடி-புரட்டாசி-மார்கழி-மாசி-பங்குனி மாதங்களும், ஞாயிறு-செவ்வாய்-வியாழமும், அச்சுவினி-மிருகசிரம்-புனர்பூசம்-அஸ்தம்-சித்திரை-சோதி-மூன்றுத்திரங்கள்-அனுஷம்-திருவோணந் தவிரமற்றநட்சத்திரங்களும், விருச்சிகம்-கும்பம் இருத்தையும் ஆகாவாம். அஷ்டமசுத்தமுள்ள லக்கனம் உத்தமம்.

நாமகரணம்,

பிராமணருக்குப் பிறந்த 12-ம் நாளும், மற்றவர்களுக்கு 30-ம் நாளும், சரராசியும்- அஷ்டமசுத்தராசியும் உத்தமம்.

அச்சுவினி-பரணி-கார்த்திகை-திருவாதிரை-ஆயிலியம் பூரம்-சித்திரை - விசாகம்-கேட்டை-பூராடம்-பூரட்டாதி அமாவாசியை-பூரணையும்-ஒற்றைத்திதியும்-பாபர் வாரங்களும்-பிற்பகலும்பகை, நீசக்கிரகபார்வையும் ஆகாவாம்.

காதுகுத்த.

பிறந்த 12-ம், 16-ம் நாள்களும், 6-ம், 7-ம், மாதங்களும் சுபர்வாரங்களும் திருவோணநீங்கிய மற்றமூ

நக்ஷத்திரங்களும் பஞ்சமி - சஷ்டி-சத்தமி-துவாதசி-திரியோதசி முற்பக்கச்சதுர்த்தசியும், 2-3-7-9-11-ல் சந்திரனும் 3 11-ல் பாபக்கிரகங்களும் இருப்பது உத்தமம். குரு 6-8-10-லும் சுக்கிரன்-6.7-8-லும், புதன் 8-லும் இருந்தாலாகாது.

காணுமாறேழாந்திங்கள் கருநாளீராறீரெட்டு
ஓணமான்றலைபூசங்க ளவிட்டமூத்திரங்களத்தம்
தோணிசித்திரையே செங்கைசுபவாரம் பன்மூன்றீரா
ருணியாமிரண்டு மூன்றைந்தாழேற்காதணிதல்நன்று

ஆளரிகுடங்கேள் தீதா மாடுமானுமிரண்டு
நாளிருபக்கஞ்சேருங் கிழமைகள்நணுகிற்றீதாம்
கோளவைவெட்டினீக்கிக் கொடுங்கதிருச்சிமுன்னே
வாள்விழிமாதே சொன்னோம் வைத்திடுகாதுவல்லே.

வல்லிமூன்றிரண்டைந் தொன்பான்பன் னென்றேழ் மதிநல்லன், புல்லர்மூன்றாறுபன்னொன் றழகியர் பொன் பத்தாறும். சொல்லிய வெட்டுந்தீப்ன் சுங்கனெட் டாறேழ் பொல்லான், நல்லனேட் டேழிற்புந்தி காதிடநவிலுங் காலே.

## அன்னப்பிராசனஞ்செய்ய

பிறந்த 6-ம் மாதம், 8-ம் மாதம், 12-ம் மாதம், வளர்பிறையிலே வியாழம்-வெள்ளி-புதனும், ரேவதி-ரோகணி-அஸ்தம் - புனர்பூசம் - அச்சுவினி-மூன்றுத்திரங்கள்-சித்திரை - சதையம் - திருவோணம் - மிருகசிரம்-அவிட்டம்-சோதி - அனுஷமும், 12-ம் இடம் சுத்தமும் உத்தமம், பூரணை அமாவாசியை நவமி இரட்டித்ததிதிகள் தவிற மற்றத்திதிகள் ஆகாவாம்-

அரைநாண்பூட்ட

பிறந்த முந்நூற்றறுபதாநாளில் ஸ்நானஞ்செய்வித்துப் புனர்யாகஞ்செய்து பொன்னரைநாட்பூட்டுவதும் கோடி வஸ்திரந்தரிப்பதும் உத்தமம்

மயிர்கழிக்க.

பிறந்த 3-ம் ஞூ-ம், 5-ம்-ஞூ-மும். ஆடி-புரட்டாசி மார்கழி - பாசி நீங்கியமற்றமாதங்களும, ஞாயிறு - செவ்வாய்-சனி-வார மொழித்து மற்றவாரங்களும், இருத்தை அஷ்டமி-உவா-பிரதமையொழித்து மற்றதிதிகளும், அஸ்தம்-சித்திரை - சோதி - உத்திராடம்-திருவோணம்-அவிட்டம் -சதையம்-மிருகசிரம்-புனர்பூசம் பூசம் உத்திரட்டாதி ரேவதி - அச்சுவினி - ரோகணி நக்ஷத்திரங்களும் கன்னி-துலாம்-ரிஷபம்-மிதுனம் - மீனம் - கர்க்கடக ஆராசிகளும் 9-ம் இடம் சுத்தமான லக்கனமும் உத்தமம்.

சந்திரன் 1-6-12-லும், சுச்கிரன் 7-லும் குரு 12-லும், 8-ல் எல்லாக்கிரகங்களும் இருக்கலாகாது 3-6-11-ல் பாபக்கிரகங்களிருக்கலாம், தாயாரிருந்தால் சுக்கிரவாரத் திலாகாது.

கவி.

ஆடிபுரட்டாசி யைப்பசிமார்கழி
தேடியஞாயிறு செவ்வாய்சனிதனில்
கூடியரோமங் குறைத்திடவல்லிரேல்
மாடுமக்களு மைந்தருமாள்வரே.

தாயபொன்வெள்ளிமூடன் தக்ஷணவயனமாகி
ஆயநற்பிறந்தநாட்க ளஷ்டமராசிக்கூறு

தூய்கதிர் சனிசெவ்வாய் நாள் தொன்மணம் புணர்ந்த வாண்டு.—நாயகிர்ப்பநாளு நன்மயிர்கழிக்கொண்ணுதே.

வருந்தோஷம்.

இரவியறுதிங்க ளெண்டிங்கள் செவ்வாய்
பரவுசனி பன்னிரண்டு திங்கள்—கருதுமயிர்
பூதலத்திலே விழுந்தாற் பொல்லாங்கெல்லாமருவும்
மாதவத்தோர் சென்ன மறை.

வித்தியாரம்பம்.

பிறந்த 5-ம்-ஞு-ம்உத்தராயணத்தில் சனி-செவ்வாய் தவிர மற்றவாரங்களில் பிரதமை-இருத்தை-திரயோதசி-அஷ்டமி-உவா-துவாதசி நீங்கியமற்றதிதிகளில் புருஷராசியில் அனுஷப்-அச்சுவனி புனர்பூசம்-பூசம்-ஆதிரை-திருவோணம்-அவிட்டம்-சதயம்-அஸ்தம் - சித்திரை - சோதி மூன்றுத்திங்கள் ரேவதி-ரோகணி நக்ஷத்திங்களில் 6-7-10 12-நீங்கிய விடத்தில் சந்திரனும், 6-நீங்கிய விடத்தில் புதனும் 8-நீங்கிய விடத்தில் எல்லாக்கிரகங்களும் இருப்பதும் 4-ம் இடம் சுத்தமும் உத்தமம்.

ஓதாதகாலம்.

அட்டமியிலோதிரு லாசானுக்காகாது
சிட்டருக்குப்பன்னுன்கு தீதாகும்—கெட்டவுவா
வித்தைக்குநாசம் விளங்குபிரதமையிற்
பித்தருட்பேசார் பிழை.

ஓலையெழுத வரிக்கணக்கு.

அடியார்க்கிரண்டுவரி யன்பர்க்குமூன்றுங்
கொடியோர்க்கு நான்காகக் கூறு—முடிபுனைந்த

வேந்தர்க்கோரைந்துவரி வேதியர்க்கோராரும்
சூழ்ந்தபனை யோலைக் கருள்.

### உபநயனம்.

பிறந்த 7-ம் ஞூ-ம், சுபர்வாரங்களில் வளர்பிறையில் இருத்தை- அஷ்டமி-ஏகாதசி-பிரதமை உவாநீங்கி மற்ற திதிகளும் அனுஷம்-அத்தம் உத்திரங்கள் மூன்றும் மிருக சிரம்- ரோகணி-அச்சுவினி சித்திரை - புனர்பூசம் - பூசம் ரேவதி நட்சத்திரங்களும் பாபகிரகங்களின் ஆச்சி நீக்கிய 8-ம் இடம்-சுத்தமாகிய லக்கினமும் உபநயனஞ் செய்ய உத்தமம்.

### முடிசூட்ட பபகைபோட

வளர்பிறையில் சுபர்வாரங்களும், மிருகசிரம்-ரோகணி அச்சுவினி-உத்திரங்கள் மூன்றும், புனர்பூசம்-பூசம்-அஸ் தம்-சித்திரை-சோதி-அனுஷம்- அவிட்டம் - திருவோணம் ரேவதி நக்ஷத்திரங்களும், பஞ்சமி-சத்தமி - திரயோதசி துவாதசி-திரிதியை திதிகளும், கன்னி-துலாம் நீங்கிய 11-ம் இடம் சுத்தமானலக்கினமும் உத்தமம்.

### கோடியுடுக்க

புதன்-வியாழம்-வெள்ளியும் உத்திரங்கள் மூன்றும் அச்சுவினி-ரேவதி-ரோகணி-புநர்பூசம்-பூசம்-அஸ்தம்-சித் திரை-சோதி-விசாகம் அனுஷம் அவிட்டமும், 6-ம் இடம் சுத்தமும் இவை உத்தமம், இருத்தையும் சரராசியும் ஆகாவாம்.

### கவி.

காரியிலழுக்கதாகுங் கதிர்வன்பீடைகாட்டும்
மாரியினனையுந்திங்கள் வன்புதன்கந்தையாகும்

வீரியமில்லைச்செவ்வாய்வெள்ளியில்மடந்தைசேர்வள்
கூரியவியாழநன்றுங் குலவியவாடைசாத்த
பூட்டுமுத்திரங்கள்தோணி புரவிபாரிருபூசங்கள்
ஈட்டியவத்தமாதி யைந்துமேலவிட்ட நற்கோள்
குட்டியவாரநன்றுந் துயரமேட்டிருத்தைசிங்கம்.
கோட்டியசரங்கணீக்கி நின்றநாள் கூறைசாத்தே

ஞாயிற்றுக்கிழமை கடகம்-கும்பம்,
திங்கட்கிழமை மீனம்-மேஷம்,
செவ்வாய்க்கிழமை தனுசு-கன்னி,
புதன்கிழமை மிதுனம்
வியாழக்கிழமை சிங்கம்-இடபம்
வெள்ளிக்கிழமை துலாம்-விருச்சிகம்,
சனிக்கிழமை மகரம்,
இவை கூடியகாலத்தில் கோடிசாத்தல் நலமெனச்
சிலர் சொல்லுவர்.

கவி

மாதியிற்கடகங்கும்பம்பார்மதிமீனமேஷம்
குருதியிற்றனுசுகன்னிகோள் புதன்மிதுனமாகும்
சுருதிபொன்னரியும்புல்லுஞ்சுக்கிரன்றுலாமுந்தேளும்
வருசனிமகரமாகும்வாரத்திற்கோடிசாத்தே.

வாகனமேற, ஆயுதம்பிடிக்க.

வளர்பிறையில் நந்தை - பூரணை - ஞாயிறு - திங்கள்
புதன்வியாழம்-கர்க்கடகம்-சிங்கம்-மிதுனம்-கன்னி-தனுசு
மீனம்-மிருகசிரம்-உத்திரங்கள் மூன்றும், மகம்-அஸ்தம்
புனர்பூசம்-திருவோணம்-சித்திரை-ரோகணி-சோதி-ரேவதி
உத்தமம்.

## ஆபரணம் பூண.

வளர்பிறையில் சுபர்வார உதயம் - நந்தை - பூரணை ரிஷபம்-மிதுனம்-கன்னி-தனுசு மீனம்-அச்சுவினி-அஸ்தம் சித்திரை-அனுஷம்-பூசம் மிருகசிரம் - ரோகணி - ரேவதி உத்தமம்.

## உழவு செய்ய.

சித்திரைமாசத்தில் பூர்வபட்சத்தில் சனி - ஞாயிறு தவிர மற்றவாரங்களும் இரட்டித்த திதிகளும், நவமியுந் தவிர மற்றத்திதிகளும், ரிஷபம்-மிதுனம் கர்க்கடக லக்கனக்களும் ரோகணி-மூலம்-உத்திரங்கள் மூன்றும் ரேவதி புனர்பூசம்-பூசம் அஸ்தநட்சத்திரங்களும் பொன்னேரென்னும் உழவுநாட்கொள்ள உத்தமம்.

## வயற் சூலம்.

நாலுகோணமாக ஒரு சதுரங்கீறி நாலுமூலையிலும் சூலமிட்டுக் கிழக்கில் 3-வரையும் தெற்கில்-5 வரையும் மேற்கில் 5-வரையும் வடக்கில் 2-வரையுங்கீறில் 27-மனை யாகும் ஈசானமூலையில் சூரியன் விட்ட நாளைவைத்து வலமாக எண்ணச் சூலத்தில் உள்ளநாள் 12-ம் உழவு செய்ய ஆகாவாம், மற்ற 15-ம் உத்தமம்.

## கலப்பைச் சக்கரம்.

ஆறுமூலையுள்ள ஒரு சதுரங்கீறி 6-மூலைகளிலும் சூலமிட 18-மனையாம், சதுரத்தின் கிழக்கு-மேற்கின்நடுப் பக்கங்களிலும் ஐவ்வைந்து வரி கீறில் 28-மனையாம், இடதுபக்கத்தின நடுமூனைச் சூலத்தின் நடுவில் ரவிநின்ற நாளை வைத்து அபிசித்துடன் வலமாக எண்ண ரவிநின்ற நாளும் மூன்பின்னுள் களும்பயிர் தீயும் பின்னெட்டுநாளும்

நல்லது, அதன் பின் 9-நாளும் உழவு தண்டை ஒயும், மற்ற நாள் 7-ம் சுகம்.

பணிச் சக்கரம்.

சர்ப்பமெழுதி சிரசில்-3 கழுத்தில்-3 முதுகில்12-வாயில் 6-வயிற்றில்-3 ஆக 27-வரை கீறி சிரசில் சுக்கிரனின்ற நாளைவைத்து நேரே எண்ண சிரம் 3-ம் பயிர் தீயும், கழுத்து மூணும் நீர்சாவி, முதுகு 12-விர்த்தி, வால் 6-ம் அற்ப விளைவு, வயிறு 3-ம் நாசமாகும், இப்படி விதைக்கு நாள் பார்க்கவும்.

சிலர் இராகுநின்ற நாளை வயிற்றின் கடையில்வைத்து அப்பிரதக்ஷணமாக எண்ணும்போது 4-5-6-வது நக்ஷத்திரம் கறுப்புத்தானியம்விதைக்கநல்லதென்றும், 7-முதல் 12-வரையுள்ள 6-ம் நல்லபயிர்செய்ய உத்தமமென்றும் மற்றவைகள் ஆகாதென்றுஞ் சொல்வர்.

விதைக்க.

சுபர்வாரங்களில் உழவுக்குச் சொன்ன விதிப்படி நெல்முதலான கதிர்த்தானியங்களுக்குத் திருவோண முதலாகச் சொன்ன 9-நாள்களும்,

மஞ்சள் மூதலான கிழங்குகளுக்கு பரணிமுதலாகச் சொன்ன 9-நாள்களும்,

பயறுமுதலான காய் தானியங்களுக்கு சோதி முதலாகச் சொன்ன 6-நாள்களும் உத்தமம்.

பஞ்சமி-சத்தமி-திரயோதசி-ஏகாதசி திரிதியை உத்தமம்.

தசமி-துதியை-சஷ்டிமத்திமம், மற்றத்திதிகள் அதமம்.

ரிஷபம்-கர்க்கடகம்-சிங்கம்-மகரம்-மீனம்-உத்தமம்.

மிதுனம்-கும்பம்-துலாம்-மத்திமம்.

மற்ற ராசிகள் அதமம்.

அஷ்டம சுத்தமானலக்கினத்தில் அந்தந்தப்பயிருக்குச்சொன்ன நாள்களில் பயிர்செய்ய உத்தமம்.

நாகவம் கிமுஸ்துக்ன கரணங்களாகாவாம்.

ஞாயிறு உதயம் நெல்லு விதைக்க.

சனியுச்சி-எள்ளு விதைக்க.

செவ்வாய் உதயம் கொள்ளும்-வரகும் விதைக்க உத்தமம்.

அச்சுவினி கரும்புநட,

ஆயிலியம்-மூலம்-வெற்றிலைதோட்டம் போட,

அனுஷமும்-சதயமும் எள்ளு விதைக்க.

ரோகணி-மரம் வைக்க

பரணி-கத்தரி முதலானவை நட,

சித்திரை-பயறு விதைக்க உத்தமம்.

கிமுஸ்துக்னமும் வணசையு கவுலமும் ஆகாவாம்.

ஆவணிமாசத்தில் சிங்கத்தில் சூரியன் பிரவேசித்த 355-நாழிகை அல்லது 6-நாளும், அக்கினி நக்ஷத்திரமும் விதைவிதைக்கலாகாவாம். இதற்கு நாட்டாச்சாலென்று பெயராம்.

கவி.

ஓணமாதிரை பூசமு ரோகணி
நீணிலுத்திர மூன்று சதயமும்
ஆணியான வவிட்டத்தோ டொன்பதும்
பூணலாகுமே ஞேக்குப் பயிருக்கே.
பரணிகார்த்திகை பாம்பு விசாகமும்
முரணுமூல மூப்பூர மகத்துடன்
கிரணமான கிழங்கு பதித்திடத்
தரணியிற்றழைத் தோங்கிடு நாள்களே.
சோதிசித்திரை சோம ஞேடுபரி
ஆதியத்த மனுஷமி ரேவதி
நீதிகேட்டை நிகழ்புநர் பூசமும்
வீதியாக விளங்கிடப் படருமே.

கதிரறுக்க.

திங்கள்-புதன்-வியாழம்-சனி-மகம்-ரோகணி-விசாகம் திருவாதிரை-திருவோணம்-அஸ்தம்-பரணி. ரிஷபம் - கர்க்கடகம்-சிங்கம்-விருச்சிகம்-உத்தமம், இருத்தை ஆகாது.

தனிரயமிட, தானியமெடுக்க.

வளர்பிறை-சனியும்- வியாழமும் - அஸ்தம் - திருவாதிரை-மகம்-ரோகணி-அனுஷம்-பரணி-உத்திரங்கள் மூன்றும், திருவோணம்-மிருக நட்சத்திரங்களும் ஸ்திரராசி உபயராசிகளும் உத்தமம், இருத்தை யாகாது.

கருப்பவதியும் கன்னிகையும் அமங்கலேயும் அல்லாத சுமங்கலிகளால் பூசித்து களஞ்சியத்தில் போடும்படி செய்வது உத்தமம். இந்தப்படியே தானியமெடுப்பது உத்தமம்.

### பிரதிஷ்டைபண்ண.

மாசிமாதம் - தேய்பிறை - குருட்டுநாள் - நவமி-உவா இரட்டித்ததிதிகள்-குரு-சுக்கிராஸ்தமனம் - சகடயோகம் விஷ்டிதோஷம-சரராசிகள் செய்யுங்கர்த்தாவின் ராசிக்கு 68-12-ராசிகளும் ஆகாவாம்.

### கவி.

கண்ணிலா நாட்கறி மாசிசடியபிற் பக்கமொன்பான்
எண்ணுவாவிரட்டைப்பக்கமிரும்புகாசெம்பொன்மூடம்
தண்ணிய கடகப்விட்டி சரராசிதலையாய்நின்ற [கா.
அண்ணல்தன்னேரைக்காறெட்டீராறுபிரதிஷ்டைக்கா

### விருந்துண்ண.

வளர்பிறையில் வெள்ளி சனி-திங்கள்-புதன் அச்சுவினி-ரோகணி-மிருகசிரம்-புநர்பூசம்-பூசம் - உத்திரங்கள் மூன்றும், அஸ்தம் சித்திரை - அனுஷம் - திருவோணம் அவிட்டம்-சதயம்-விசாகம்-உத்தமம்.

இருத்தையும் உவாவும்-மேஷமும்-விருச்சிகமும் மீனமும் ஆகாவாம்.

### கவி.

வெள்ளிசனிதிங்கள் விருந்துண் புதனுகும்
கள்ளவியாழங் கசப்பிக்கும்—தெள்ளுகதி
தீராப்பகை காட்டுஞ் செவ்வா தனக்குமோ
வாராப் பகைவும் வரும்.

### பரிகாரம்.

செவ்வாய்க்குப் பாலாங் தினகரற்கு நொய்யாகும்
மெய்யாம் வியாழம் வெந்நீராகும்—ஐயாகேள்

இந்நா ளொருவிந்தை யிட்டிடவேண்டிட்டால்
சொன்னோம் பரிகாரந்தான்

மருந்துண்ண.

ஞாயிறு - வியாழம் - அமரபக்கத்திதிகளும் உத்தமமாம், ஜன்மானுஜன்மம்-ஜனனதிதி-ஜனனவாரம்-திருவாதிரை முதலாக விலக்கப்பட்ட நக்ஷத்திரங்களும் ஆகாவாம்.

மனை கோல அகமெடுக்க.

தைமாதம் கிழக்குவாசடையிலும்
சித்திரை-வைகாசி மாதங்களில் தெற்குவாசடையிலும்
ஆவணிமாதம் மேற்குவாசடையிலும்.

ஐப்பசி-கார்த்திகைமாதங்களில் வடக்குவாசடையிலும் அகமெடுக்க உத்தமம்.

மற்றமாதங்கள் வீடுகட்ட ஆகாவாம்
இடபம்-மிதுனம்-கர்க்கடகத்துக்கு கிழக்குவாசலும் வடக்குவாசலும்

சிங்கம்-கன்னி துலாத்துக்குமேற்கு-வாசலும்-தெற்கு வாசலும்.

விருச்சிகம் - தனுசு- மகரத்துக்கு மேற்கு வாசலும் தெற்குவாசலும்.

கும்பம்-மேஷத்துக்கு-வடக்குவாசலும் - மேற்கு வாசலும் பொருந்தும்.

ரோகணி-ரேவதி-பூசம்-மிருகசிரம்-அனுஷம்-அஸ்தம் உத்திரங்கள் மூன்றும் உத்தமம், புநர்பூசம் பூசம்-மூலம் அவிட்டம்-சோதி-சதயம்-மத்திமம், மற்றவை ஆகாவாம்.

பாபர் வாரங்களும் உவா - இருத்தை - அஷ்டமியும் சரராசிகளும் ஆகா, முக்கியம் 12-ம் இடம் சுத்தம் வேண்டும்.

சிங்கம்-விருச்சிகத்தில் குருவும்.
கும்பத்தில் சுக்கிரனும்-சந்திரனும்
ரிஷபத்தில் புதனும்-சுக்கிரனும்.
இருக்குங் காலமாகில் விசேஷ உத்தமம்.

## கிணறுவெட்ட கரைகட்ட.

ஐப்பசிமாதம்- 10-க்குமேல் 20-தேதிக்குள் உத்திர மூன்றும், கேட்டை-ரேவதி-சித்திரை-ரோகணி - திருவோணம்-அஸ்தம்-மிருகசிரப்-பூராடம்-மகம்-பஞ்சமி - சத்தமி திரிதியை-ஏகாதசி-திரயோதசி - பிரபமை - கும்பம்-மீனம் மகரம்-ரிஷபம்-கர்க்கடகம்-சுபவாரங்களும் கினறுவெட்ட உத்தமம்.

சித்திரைமாதத்தில் முன்சொன்னபடி கூடிய நாளில் கரைகட்ட உத்தமம்

## கிணறு விழுமிடமறிய.

கண்ட நிலத்தை 12-பங்கு பண்ணரிக் கிழக்கு மேற்கு நீண்டமனையாயின் கிழக்கின் நடுப்பங்குமே ஷமாகவுங், தெற்கு வடக்கு நீண்டமனையாயின் தெற்கின் நடுப்பங்கு மேஷ மாயுங்கொண்டு மேஷத்தில் சூரியனை வைத்து வலமாகசூரியன்- சந்திரன் - செவ்வாய்புதன் - குரு - சுக்கிரன் சனி-இராகு-கேது-பிரமன்-விஷ்ணு-ருத்திரன் என மீனம் வரை எண்ணில் சூரியனில் பாராகும், சந்திரனில்வெகுநீராகுஞ்செவ்வாயில் அற்பநீராகும், புதனில் சிறு ஊற்ருகும்,

குருவில் பாராகும், சுக்கிரனில் வெகுநீராகும், சனியில் கரைவிழும், இராகுவில் உவர்நீராகும கேதுவில் அற்ப நீராம், பிரமனில் பாரையாம், விஷ்ணுவில் குழிகுண்டு மிகுகரையுமாம், ருத்திரனில் வெகுநீராம்.

கவி

கண்டநிலந்தனைப்பன்னிருகூறதாக்கிக்
கதிராதியுருத்திரவரைவலமாமெண்ணக்
கொண்டரவிபாராகும்வெகுநீராகும்
கூறற்பநீராகும்வெகுநீராகும்
திண்டிறல்சோபாராகும்வெகுநீராகும்
செய்திடுநற்கரைவீழுமுவர்நீராகும்
உண்டற்பநீராகும்பாரையாகும்
உடைகரையுங்குழியுண்டாம்வெகுநீராமே.

யாத்திரை.

செவ்வாய்க்கிழமையும் ரோகணிமுதல் ஐந்து நட்சத்திரமும் நந்தையுங் கிழக்கிலும்.

உத்திரமும்-அஸ்தமும்-திங்களுஞ் சனியும் - பத்திரையுந் தெற்கிலும்.

அனுஷம்-கேட்டை-மூலம்-உத்திராடம்-திருவோணம் 5-நட்சத்திரங்களுஞ் சயையும். வியாழக்கிழமையும் மேற்லும்.

அவிட்டம்-சதயம்-உத்திரட்டாதி-ரேவதி அச்சுவினி-5-நட்சத்திரங்களும் பூரணையுஞ்-ஞாயிறும்-வெள்ளியும்-வடக்கிலும்.

யாத்திதை செய்ய உத்தமம்.

பரணி-கார்த்திகை-திருவாதிரை பூரங்கள் மூன்றும், ஆயிலியங்கேட்டைசித்திரைவிசாகஞ்சோதிமகம்இருத்தை பிரதமை-அஷ்டமி-உவா-ஞாயிறு- செவ்வாய்-புதன் - ஸ்தி

ராசிகளும்.விஷ்டி தோஷம்-வியதீபாதம்-பரிவேடம்கிரகண காலமும்-சூலமும், சங்கிரமம்-தூமம்-இடி-மின்னல்-மழை பொழிதல்-இடறல்-தும்மல்-பெண்சாதி தூரகாலம் இவையுண்டாகும்போது யாத்திரை செய்யலாகாது.

ஜென்மலக்கினத்துக்கு 2 3-6-11-இராசிகளும், முக்கியமாய் ஐந்தாமிடஞ் சுத்தமிருக்கும் ராசிகளும் பிரயாணத்துக்கு உத்தமம்.

பெண்களுக்கு ஆடி-புரட்டாசி-மாசி-வெள்ளி-புதன் விலக்கப்பட்டன,

அன்றையத் திதிவார நக்ஷத்திரங்களை அவ்வவ்வாதியாகக் கணக்கிட்டுக் கண்ட தொகையை 2-ல் பெருக்கி 7-க்குக்கொடுத்து மிச்சங்காணில் மகிழ்ச்சி 3-ல், பெருக்கி 8-க்குக் கொடுத்து மிச்சங்காணில் இன்பம், முன்தொகையை 4-ல், பெருக்கி 6-க்குக் கொடுத்து மிச்சங்காணில் சுபம். மூன்றிலும் சேடங்காணில் உத்தமம் 2-ல் காணில் மத்திமம், ஒன்றில் காணில் பரியாயம், சேடமில்லாவிடின் யாத்திரை போகலாகாது,

### யாத்திரைச்சூலம்.

3-சூலமெழுதி ஒவ்வொன்றின் அடிக்காம்பின் நடுவில் 6-முனை தோன்றும்படி மும்மூன்று வரையிட்டால் 27முனை தோன்றும், இடதுபக்கத்துச் சூலத்தி னடுவில் யாத்திரை நாளை வைத்து வலமிடமாகக் கீழுமேலும் ஜனனநாள் வரை யெண்ண நடுவரை 12-லும் வரின் உத்தமம், வெளிப்பக்கம் 6-வரையிலும் வரின் பறவைபோலலைவான், சூலமுனை 9-லும் வரின் மரணம்.

கவி

இலைதெரியச் சூலங்கள் மூன்றுகீறி
இடைச்சூலத் தியாத்திரைநாள் தன்னை வைத்து
வலமிடமா யிருபத்தேழ் நாளுமெண்ணில்
வழிப்போவான் பிறந்தநாள் நடுவிராறேல்
பலமிகவே யுண்டாகும் பக்கவாறில்
பறவைபோ லலைந்திடுவான் பகர்ந்தசூலம்
தலையளவே யாமாயிற் சாவான்றிண்ணம்
சத்தியமாயிந்நூலைச் சாற்றினேமே.

வினவுறு விண்டுவில் லுவிதிபாத மூர்கோள்வட்டம்
துனிவுறு கிராணஞ்சூலம் தூயசங் கிராந்திதூரம்
வனிதைகேளிடித்தல்மின்னல்மழைபெய்தலிடறல் தும்மல்
இணையவைசெய்யப்போகிலெய்திடுநாசந்தானே.

ஆடுகன்னி வின்மிதுன மல்லற் படுத்துவிக்கும்
நீடுமகர மினைவழிக்கும்—நாடுங்கால்
மீனமினை வாக்கு மிகுமழையாங் கும்பத்தில்
ஊனமில்லா லக்கனத்தை யோது.

விற்பகையை வெல்விக்கு மேலா மெருதுசுபம்
எப்பகையும் வெல்லு மிருங்கடகம்—சொற்பெரிய
மன்னனுஞ் சிங்கம் மகிழ்வாம் விருச்சிகத்தில்
தன்னுடம்பிற் காட்டுந் தழும்பு.

இராசி விசேஷம்.

| | | | |
|---|---|---|---|
| விவாகத்துக்கு | மேஷம் | வீடுகட்ட | துலாம் |
| திதிகொடுக்க | ரிஷபம் | உழவுக்கு | விருச்சிகம் |
| யாத்திரைக்கு | மிதுனம் | கிணறுவெட்ட | தனுசு |
| மரம்வைக்க | கர்க்கடகம் | கப்பல்யாத்திரை | மகரம் |
| குருவைக்காண | சிங்கம் | மயிர்கழிக்க | கும்பம் |
| புணர்ச்சிக்கு | கன்னி | வித்தியாரம்பத்துக்கு | மீனம் |

மடசுத்தம்.

| | | | |
|---|---|---|---|
| குடிபுக | 12-ம் | விவாகத்துக்கு | 7-ம் |
| முடிசூட்ட | 11-ம் | கோடிவுடுக்க | 9-ம் |
| அன்னபிராசனத்து | 10-ம் | யாத்திரைக்கு | 5-ம் |
| மயிர்கழிக்க | 9-ம் | வித்தியாரம்பத்துக்கு | 4-ம் |
| உபநயனத்துக்கு | 8-ம் | பொன்பூண | 2-ம் |

நிஷேகத்துக்கு லக்கனமுஞ் சுத்தமாக யிருக்கவேண்டும்.

அருக்கனிலை.

சனிக்கிழமை இராத்திரி 30-நழிகையும் ஞாயிற்றுக் கிழமை பகல் 30-நாழிகையும் தெற்கிலும்.

ஞாயிற்றுக்கிழமை ராத்திரி 30-ம், திங்கட்கிழமை 60-ம் தென்மேற்கிலும்.

செவ்வாய்க்கிழமை பகல் 30-ம், இராத்திரியில் 10-ம் மேற்கிலும்.

மற்ற 20-ம், புதன்கிழமை பகல் 30-ம், வடமேற் கிலும்.

புதன்கிமை ராத்திரி 30-ம், வியாழக்கிழமை பகல் 30-ம், இராத்திரியில் 10-ம் வடக்கிலும்.

மற்ற 20-ம், வெள்ளிக்கிழமை 60-ம். வடகிழக்கிலும்,

சனிக்கிழமை பகல் 30-ம், கிழக்கிலும் அருக்கனிருக் கும். அக்கினிமூலை பாழாம்.

திசையோனிநிலை

| | | | |
|---|---|---|---|
| கருடன் | கிழக்கு | பாம்பு | மேற்கு |
| பூனை | தென்கிழக்கு | எலி | வடமேற்கு |
| சிங்கம் | தெற்கு | யானை | வடக்கு |
| நாய் | தென்மெற்கு | முசல் | வடகிழக்கு |

அருக்கனில் கருடனைவைத்து முறையே பார்க்கும் போது எதிருக்கெதிர் பகையோனிநிற்கும் அவைகளுள் கருடன் திசையிலிருந்து பாம்பு திசைக்குப் போகலாம், பாம்பு திசையிலிருந்து கருடன்சைக்குப் போகலாகாது ஏனெனில் கருடன் இரை எடுக்கப்போகும்,பாம்பு இரையாகவரும் ஆதலாலென்க. ஒருவன் யாத்திரைக்குப் பக்ஷி முதலிய சகுனங்கள் பார்க்கும்போது இரையாகும் யோனித்திசையிலிருந்து இரையெடுக்கும் யோனித்திசைக்குப் போகலாகாது.

கவி.

அருக்கனிலே யிற்கருட னனதொரு பூனை
நெருக்கியநற் சிங்கமொடு நின்றிலகு நேர்நாய
தருக்கமுட னுகமெலி யானைமுச லெட்டும்
இருக்குமுத லிந்திரனே ராம்பகை யெதிர்த்தே.

மனை நூல்

மனையைய தச்சுமுழத்தாலளந்து குழியாக்கி அந்தக் குழியை,

8-ல் பெருக்கி 12-ல் கழித்தமிச்சம் ஆதாயம்,
9-ல் பெருக்கி 10-ல் கழித்தமிச்சம் செலவு.
4-ல் பெருக்கி 400-ல் கழித்தமிச்சம் வயது.
8-ல் பெருக்கி 27-ல் கழித்தமிச்சம் நக்ஷத்திரம்.
3-ல் பெருக்கி 8-ல் கழித்தமிச்சம் யோனி.
9-ல் பெருக்கி 7-ல் கழித்தமிச்சம் வாரம்.
9-ல் பெருக்கி 4-ல் கழித்தமிச்சம் ஜாதி.
4-ல் பெருக்கி 9-ல் கழித்தமிச்சம் அம்சம்.

9-ல் பெருக்கி 30-ல் கழித்தமிச்சம் திதி இதில் கருக்கு உட்பட்டால் வளர்பிறையாகவும், கருக்குமேல் தேய்பிறையாகவுங்கொள்க.

4-ல் பெருக்கி 12-ல் கழித்தமிச்சம் இராசி.

8-ல் பெருக்கி 5-ல் கழித்தமிச்சம் சூத்திரமாகக்கொள்ளவும்.

இவற்றுள் யோனி.

| | | | |
|---|---|---|---|
| 1-க்கு | கருடன் | 5-க்கு | பாம்பு |
| 2-க்கு | பூனை | 6-க்கு | எலி |
| 3-க்கு | சிங்கம் | 7-க்கு | யானை |
| 4-க்கு | நாய் | 8-க்கு | மூசல் எனகொள்க |

இவற்றுள் பூனை-எலி-மூசல் ஆகாவாம்.

அம்சம்.

| | | | |
|---|---|---|---|
| 1-க்கு | சோரம் | 6-க்கு | கிலிபம் |
| 2-க்கு | புத்தி | 7-க்கு | வருத்தம் |
| 3-க்கு | சத்தி | 8-க்கு | ரோகம் |
| 4-க்கு | தானியம் | 9-க்கு | சுபம் |
| 5-க்கு | இராச்சியம் | 1-6-7-8 | ஆகாவாம் |

சூத்திரம்.

| | | | |
|---|---|---|---|
| 1-க்கு | பாலன் | 4-க்கு | கிழவன் |
| 2-க்கு | குமாரன் | 5-க்கு | மரணம் |
| 3-க்கு | இராசன் | இவற்றுள் 4-5 | ஆகாவாம் |

வீட்டின் அகலத்தை 9-பங்காக்கி வலத்தில் 3-பங்கும் இடத்தில் 5-பங்குதள்ளிநின்ற பங்கில் தெருவாசற்படி வைக்கவும், வலத்தில் 2-பங்கும் இடத்தில் 3-பங்குந்தள்ளி நின்றபங்கு 4-உள் முற்றமாக்கவும் நல்லது.

பிராமணருக்கு தெற்கு-வடக்கு நீளமாகிய சந்திர பத்தியாகவும், மற்றவர்களுக்கு கிழக்கு-மேற்கு நீளமாகிய சூரியபத்தியாகவும் முற்ற மிருக்கவேண்டும்.

கவி.

இட்டவெட்டுடன் பன்னிரண்டாக்கமாம்
ஏற்றுவொன்பதோ டுரைந்தழிவதாம்
முட்டில்மூன்றுட னெட்டுமேயோனியாம்
மொழிந்தவெட்டுடன் மூவொன்பானுளதாம்
விட்டிரண்டுடனேழுங்கிழமையாம்
விடாதவொன்பதும் வேதமுஞ்சாதியாம்
சிஷ்டிநாலு மணியுமாமங்கிஷம்
சிறந்தவொன்பது முப்பதும் பக்கமே.
நாவிற்பெருக்கி நானூறுக்கியச்
சீலமா மாயுளெனத் தேர்.

தச்சமுழம் ஒன்றுக்குக் கைமுழம் இரண்டு. இது, வீட்டேசமானனுடைய கையாற்கொள்க.

வீட்டின் உத்தளவைத் தச்சமுழத்தாலளந்து குழியாக்கி 9-ல், பெருக்கி 20-ல, கொடுக்க மிச்சத்தில் 6-தள்ளி

7-க்கு நாசம்
8-க்கு இடையூறு நீங்கும்
9-க்கு திருக்கோடும்
10-க்கு பாலுமன்னமுண்டு
11-க்கு புத்திர ஹானி
12-க்கு புத்திரருண்டு
13-க்கு பகைநோய்குடி நீங்கும்
14 க்கு பாக்கியம்
15 க்கு பொருளும் உயிரு நீங்கும்
16-க்கு சுபம்
17-க்கு மத்திபம்
18-க்கு குடிநிலையாது
19-க்கு பொருளழிவு
20-க்கு இன்பமுண்டு

மிச்சம் ஆறுவரையி லுண்டா யிருக்கலாகாது, ஆகை யால் எட்டு வரும்படியாகச் செய்துக்கொள்ளவும்,

சந்திரனின் றலக்கினத்தில் அஸ்திபாரஞ்செய்து, புத னின் றலக்கினத்தில் கட்டி, சுக்கிரனின்ற லக்கினத்தில் வேய்ந்து வீடுமூடி, குருவின்ற லக்கினத்தில் கிரகப்பிர வேசஞ்செய்தால் இந்திரபோகமுண்டு

கவி.

மதியுதிக்க கால்நாட்டி மாலுதிக்கக் கட்டி
வெதிவெள்ளி தானுதிக்க வேயந்து—பதிதனிலே
மந்திரிதா னுதிக்க மாடங் குடிபுகுந்தால்
இந்திரன்போல் வாழ்ந்திருக்கலாம்.

துறை இரட்டித்தும், கைதூலம் முதலியன ஒற்றை யாயும், தாண்குந்து உண்டானவீடு எஜமானனுக்குக் கெடுதிதரும்.

எஜமானனுடைய லக்கினத்துக்குக் கிரகப்பிரவேச லக்கினமும் அஸ்திபாரலக்கினமும் வலமாய் 6-இராசிக் குள்ளிருக்கின் நலம், இடமாய் 6-இராசிக்குள்ளிருக்கின் ஆகாவாம்.

வலம் 6-க்கும் முத்தித்தனு வென்றும் இடம் 9-க்கும் பேதிதனுவென்றும் பெயர்,

கவி.

நன்னாளினில்மனை கோலி நரனாரிடராசி
முன்னாகியவலமாகுதல் முத்தித்தனுவென்றும்
பின்னாகியவிடமாகுதல் பேதித்தனிவென்றும்
பொன்னாவதுமுயிராவதும் போமாறித் திண்ணம்,

### வாசற்படிவைக்க.

வீட்டின் நலத்தை 9-கூறு செய்து வாமத்தில் 5-பங்கும், வலத்தில் 3-பங்கும் விட்டு வாசற்படிவைக்கவும்.

கிழக்கு மேற்கு வீதிக்கு வலம் கிழக்காகவும், இடம் மேற்காகவும், தெற்கு வடக்கு வீதிக்குவலம், வடக்காகவும், இடம் தெற்காகவும் கொள்க.

### கவி.

வீட்டினளவை விளங்கொன்பான் கூறுசெய்து
நீட்டியளந்த நிலைக்கோளால்—கூட்டிடுவாய்
வாமத்தேயைந்தும் வலத்தே பொருமூன்றாய்
சேமத்தே வாசலிடச் செப்பு

### ஆகாமாதம்.

ஆடித்திங்களில் ராவணன் பட்டதும்
ஆலமேய்பெரும் பாரதமார்கழி
வீடிட்டான்புரட் டாசியிரணியன்
மேவியீ சனஞ் சுண்டதுமாசியில்
பாடிக்காம னெரிந்தது பங்குனி
பார்க்குளே கினன் மாபலியானியில்
வீடிட்டில்லங் குடிபுகவேண்டியே
ரோடிட்டேயிரந் தூண்பருலகினே.

### நிலைச்சூலம்

4-மூலையுள்ள ஒருசதுரங்கீறி 4-மூலையிலும் சூலமிட்டுச் சதுரத்தின் கிழக்கில் 9-வரையும், தெற்கில் 2-வரையும் மேற்கில் 3-வரையும், வடக்கில் 2-வரையும் கீற 28-மூலையாம், கிழக்கிலுள்ள நடுவரையில் ரவிநின்ற காலை வைத்து வலமாக அபிசித்துடன் எண்ணக் கிழக்கிலுள்ளவரை 9-ம் மேற்கிலுள்ளவரை 3-ம் ஆக 12-ம்

ஆகிய நாள்வாசக்கால் வைக்க ஆகாவாம், மற்றைய நாள் 15-ம் உத்தமம்.

சாதகப் பொருத்தம்.

லக்கனத்துக்கு 1-2-7-8-ல் பாபக்கிரகங்களிருந்தால் முழுப்பாப மென்றும்,

4-12-ல் இருந்தால் காற்பாப மென்றும் பேராம்.

மேலும் செவ்வாய் நீங்கிய பாபிகளுக்கு 4-ம் 12-ம் ஆட்சி வீடாயில் அரையும்.

உச்சவீடாயில் முக்காலும்
நட்புவீடாயில் காலும்
பகைவீடாயில் முழுமையும்
நீச்சவீடாயில் முழுமையிற் குரூரமாகிய பாபமாம்.

பெண்சாதகபாபம் பிள்ளை சாதக பாபத்துக்குக் குறைந்திருக்கவேண்டும், சமனுமிருக்கலாம், அதிகப்படலாகாது.

சிலநூல்கள் சுக்கிரனின்ற ராசியைத்தொட்டும் சந்திரனின்ற ராசியைத்தொட்டும் பார்க்கும்படி சொல்லுகின்றன.

கவி

திட்டஞ்சொல் பாபர்கேது சேய்ரவி மந்தன் ராகு
எட்டுவாக் கொன்றநேதாழி லிருந்திடின் முழுதும்பாபாம்
கட்டுநான் கீராருயிற் காலதாங்குசனுக்கொன்றும்
இட்டமாய்ப் பார்க்கவெள்ளி யிந்துலக் கனத்தைப்பரே.

ஓர்பாவிமா தருக்கா ேணறிசிற்கிலொக்கும்
சீர்காலோடரைமுக்கால் சேர்சரிநன்றாகும்
நாரியர்க்குக்காற்பாவி கூடிலாண்மரணம்
சேர்சிங்கம்வில்கயல்கோல் தேளாடாஞ்செப்பே

1-வது நட்சத்திரப்பொருத்தம்

பெண்ணினுடைய நாள்முதல் புருஷனுடைய நாள் வரையில் எண்ணும்போது 2-4-6-8-9-12-14-16-19-22-23-26-28-29-ம் நட்சத்திரங்களுத்தமம்.

பத்து நட்சத்திரமான பின் மறுபடியும்பத்தா நட்சத்திரந் தொடங்கியும், இருபது நட்சத்திரமானபின் மறுபடியும் இருபதா நட்சத்திரந் தொடங்கியும் எண்ணிக்கொள்ளவும்.

2-வது கணப்பொருத்தம்

பெண்ணுடைய நட்சத்திரமும் புருஷனுடைய நட்சத்திரமும் ஒரே கணமானால் உத்தமம்.

இராக்ஷத கணமும், தேவ கணமுமாகில் சிலுகுண்டாம்.

இராக்ஷத கணமும், மனுஷ கணமுமாகில் மரணம்.

மனுஷகணமும் தேவகணமுமாகில் மத்திமம்.

3-வது மகேந்திரப் பொருத்தம்

பெண்ணாள் முதல் புருஷன் நாள்வரை எண்ணும்போது 1-4-7-10-13-16-19-22-25-ஆனால் உத்தமம்.

## 4-வது ஸ்திரீதீர்க்கப் பொருத்தம்

பெண்ணுள் முதலாகவெண்ணும்போது புருஷனுள் 13-க்கு மேலானால் உத்தமம்,

## 5-வது யோனிப் பொருத்தம்

| | |
|---|---|
| யானைக்கு பகை | மனுஷர் |
| குதிரைக்குப் பகை | பசு |
| மானுக்கும் எருமைக்கும் பகை | புலி |
| பாம்புக்கு பகை | ஆடு |
| குரங்குக்குப் பகை | நாய் |
| எலிக்குப் பகை | பூனையாம் |

இவையுமன்றி இரண்டும் புருஷயோனியானால் ஆகாவாம், பெண் ஸ்திரியோனியும் புருஷன் புருஷ யோனியுமானால் உத்தமம், மாறியிருந்தாலாகாது.

## 6-வது இராசிப் பொருத்தம்

பெண்ராசிமுதல் புருஷன் ராசிவரை எண்ணினால் 6-இராசிக்கு மேலாயின உத்தமம்.

## 7-வது இராசிக்கதிபதி பொருத்தம்

பெண்ராசிக்கும் புருஷன் ராசிக்கும் அதிபதிகள் நட்பாயிருக்கில் உத்தமம்.

## 8-வது வசியப் பொருத்தம்

| | |
|---|---|
| மேஷத்துக்கு | சிங்கமும்-விருச்சிகமும் |
| இடபத்துக்கு | கர்க்கடகமும்-துலாமும் |
| மிதுனத்துக்கு | கன்னியும் |
| கர்க்கடகத்துக்கு | விருச்சிகமும்-தனுசும் |
| சிங்கத்துக்கு | மகரமும் |
| கன்னிக்கு | ரிஷபமும்-மீனமும் |

| | |
|---|---|
| துலாத்துக்கு | மகரமும் |
| விருச்சிகத்துக்கு | கர்க்கடகமும்-கன்னியும் |
| தனுசுக்கு | மீனமும் |
| மகரத்துக்கு | கும்பமும் |
| கும்பத்துக்கு | மீனமும் |
| மீனத்துக்கு | மகரமும் |

வசியமாம்.

## 9-வது ரச்சுப்பொருத்தம்

நேரே மூன்று முக்கோணங்கீறி குறுக்காக நான்கு கீற்றுக்கீறினால் 27-பொருத்தமாம்,

குறுக்காகக்கீறிய அடிவரைக்குக்காலென்றும்,
அதன்மேல் வரைக்குத் தொடையென்றும்
அதன்மேல்வரைக்கு வயிறென்றும்,
அதன்மேல்வரைக்குக் கழுத்தென்றும்,
முக்கோணத்துச்சிமூன்றுக்கும் தலையென்றும் பெயராம்.

முன்சொன்ன பொருத்து 27-லும் முதல் பொருத்தில் அச்சுவினியைவைத்து மேல்கீழாய் வலமாக முறையே எண்ணும்போது புருஷனுடைய நக்ஷத்திரமும் பெண்ணினுடைய நட்சத்திரமும் குறுக்காகக் கீறியவரைகளில் ஒருவரையி லிருக்கலாகா.

| | |
|---|---|
| கால்வரையில் வந்தால் | பொருளழிவு |
| தொடைவரையில் வந்தால் | பலமடி |
| வயிற்றுவரையில் வந்தால் | புத்திர ஹானி |
| கழுத்துவரையில் வந்தால் | புருஷனிறப்பு |
| சிரசுவரையில் வந்தால் | பெண்ணிறப்பு |

இப்படிப்பார்த்துக் கொள்ளவும்

## 10-வது வேதைப் பொருத்தம்

ஒரு முக்கோணங்கீறி மூன்று மூலையிலும் நந்நான்கு வரைகீறில் 27-பொருத்தமாம். முன்போல அச்சுவினி முதலாக எண்ணும்போது இருவர் நாளும் ஒரு குறுக்குவரையிலிருக்கலாகாது.

## 11-வது மரப்பொருத்தம்

முன்சொன்ன மரங்களுக்குள்ளே பலாசு - புன்னை-நாவல் - மகிழ் - பலா மா - இலுப்பை-சண்பகம்-எருக்கு-வஞ்சி-அரசு-ஆல்-அத்தி-மாதுளை-பிராய் என்னும் 14-லும் பாலுள்ள மரமாம்.

மற்றவை வயிரமுள்ளமரமாம்.

புருஷன்வயிரமரமும்-பெண் பால்மரமுமானால் புத்திரனுண்டு,

பெண் வயிரமரமும்-ஆண் பால் மரமுமானால் மலடு
இருவரும் வயிரமரமானால் புத்திரசேதம்,
இருவரும் பால்மரமானால் அதிகநலம்.

## 12-வது பக்ஷிப் பொருத்தம்

மயிலுக்கும்-கோழிக்கும் வல்லூறுபகை
வலியனுக்கு-ஆந்தை பகை
ஆந்தைக்கு-வலியன் பகை
வல்லூறுக்கு-வலியனொழிய எல்லாம் பகை

இப்படியே புருஷனுக்கும் பெண்ணுக்கும் உள்ள பக்ஷிகளில் பகையில்லாதிருக்க வேண்டியது.

## 13-வது ஆயுட்சோதனைப் பொருத்தம்

பெண் நக்ஷத்திரமுதல் புருஷனுடைய நக்ஷத்திரம் வரை எண்ணின தொகையை 7-ல் பெருக்கி 27-மிற்

கீந்து நின்றமிச்சமும் புருஷன் நாள்முதல் பெண் நாள் வரையில் எண்ணி முன்போற் பெருக்கிக் கழித்த மிச்சமும் பார்க்கும்போது பெண்நாட்குறையில் பெண் முன்னும் புருஷன் நாட்குறையில் புருஷன் முன்னும் பதவியடைவரென்பதாம்.

கவி.

அன்றபெண் பிறந்தநாடொட் டாணிநாளளவு மெண்ணி, — நின்றவர்நாட்கடொட்டு நேரிமைநாளீருக்ச், — சென்றதையேழிற்ருக்கி யிருபத்தேழ்க்கீந்த சேடம்,—மன்றலங்குழலாய் தாழ்ந்தோர் மரணமுண்டென்று சொல்லே.

## 14-வது சாதிப் பொருத்தம்

கர்க்கடகம்-மீனம்-தனுசு-மறையவராம்.
மேஷம்-விருச்சிகம்-அரசராம்.
கும்பம்-துலாம்-வைசியராம்.
இடபம்-மகரம்-சூத்திரசாதியாம்.
மிதுனம்-சிங்கம்-கன்னி அன்னிய சாதியாகும்.

ஆதலால் பெண்சாதிக்குப் புருஷன்சாதி உயர்ந்திருக்க வேண்டும்.

## 15-வது ஊர்ப்பொருத்தம் நரச்சக்கரம்

ஊர்ப்பெயர் முதலெழுத்துக்கும், பொருத்தங் கேட்போன் பெயர் முதலெழுத்துக்கும், நக்ஷத்திரங்கண்டு மனிதவுருவமெழுதி சிரசில்-5, முகத்தில்-3, வயிற்றில்-5, காலில்-6, கண்ணில்-1, குய்யத்தில்-1, குதத்தில்-1 மார்பில்-4, புஜத்தில்-1, ஆக-27, நக்ஷத்திரங்களு மெழுதுக எவ்வாறெனின் தலையில் ஊர்நாளைவைத்து பாதபரியந்தம்

எண்ணத் தலைவன்நாள் தலை 5-ல் வரின் நன்று, முகம் 3-ல் வரின் ஆகாது, வயிறு 5-ம் உத்தமம், கால் 6-ம், கண்-குகம்-துய்யம் 3-ம் ஆக 9-ம் ஆகா. மார்பு 4-ம் புஜம் 1-ம், ஆக 5-ம் உத்தமம்.

படிதன்னிலூரின் முதனுடொடங்கிப் பகர் சன்மநாளி னளவாய்முடிவையந்து நன்று முகமூன்று தீது முதிர் தொந்தியையந்துநன்று,-அடியாறுநோடு நயனத்திலொன்று மடியோனி ரண்டுமசடாம்,-வடிமார்பினுங்கும் புயமீதி லொன்றும் மனமே மகிழ்ச்சி தருமே.

## 16-வது நட்சத்திரவேதைப் பொருத்தம்

| | | |
|---|---|---|
| அசுபதிக்கு | ... | கேட்டை |
| பரணிக்கு | ... | அனுஷம் |
| கார்த்திகைக்கு | ... | விசாகம் |
| ரோகணிக்கு | ... | சோதி |
| திருவாதிரைக்கு | ... | திருவோணம் |
| புனர்பூசத்துக்கு | ... | உத்திராடம் |
| பூசத்துக்கு | ... | பூராடம் |
| ஆயிலியத்துக்கு | ... | மூலம் |
| மகத்துக்கு | ... | ரேவதி |
| பூரத்துக்கு | ... | உத்திரம் |
| அஸ்தத்துக்கு | ... | சதையம் |
| பூரட்டாதிக்கு | ... | உத்திரட்டாதி |

இவை ஒன்றுக்கொன்று வைரம்

மிருகசிரம்-சித்திரை-அவிட்டம் இம் மூன்றும் ஒன்றுக்கொன்று பரஸ்பர வைரம், புருஷனுக்கும் பெண்ணுக்கும் இந்நாள் பொருந்தாது.

## 17-வது சேவகன் பொருத்தம்

தன்னுடைய நட்சத்திர முதல் சேவகன் நட்சத்திரம் வரை எண்ணிக் கண்டதொகையை 12-ல் கொடுத்த சேடம் 1-5-9 ஆயின் உத்தமம். 2-6-10-ஆயின் ஆகாது. 3-7-11-ஆயின் மத்திமம்,

## 18-வது கூட்டாளிப் பொருத்தம்

தன்பெயரை ஒற்றுள்பட எழுத்தெண்ணி 10-ல் பெருக்கின தொகையுடன் கூட்டாளி பெயரை அவ்வா றெண்ணிக்கூட்ட 8-ல் கொடுத்தசேடம் 1-3-5-7 உத்தமம். 2-4-6-8-ஆகா.

## நித்தயோகினிநிலை

பகலை எட்டுபங்காக்கி,

| | |
|---|---|
| 1-வது கிழக்கிலும் | 5 வது மேற்கிலும் |
| 2-வது வடமேற்கிலும் | 6-வது தென்கிழக்கிலும் |
| 3-வது தெற்கிலும் | 7-வது வடக்கிலும் |
| 4-வது வடகிழக்கிலும் | 8-வது தென்மேற்கிலும் |

## நித்தியயோகினி நிற்கும்

இது யாத்திரைக்குப் பின்பக்கமும் இடதுபக்கமும் இருக்கவேண்டும். இதுநித்தியம் கிழக்குப்பக்கமுதலாகக் கொள்ளவும்.

## கவி.

சீர்பெறுநித்தியயோகினியதனைச்
செப்பிடிற்கிழக்குடன்வடமேற்
கேர்பெறுதெற்கோடாகுமீசானம்
எழில்பெறுமேற்குதென்கிழக்கு
பார்புகழ்வடக்குப்பகருதென்மேற்குப்
படியொருதினத்திலோர்முகூர்த்தம்

நேருடன் கிழக்கைகயாதியாய்க்கொண்டு
நிகழ்த்திடுயோகினி நிலேயே

திதி நக்ஷத்திர யோகங்களின் விர்த்திக்ஷயம்

| | | |
|---|---|---|
| நக்ஷத்திர வர்த்தனை | நாழிகை $6\frac{1}{2}$ | க்ஷயம்-$4\frac{1}{4}$ |
| யோகவர்த்தனை | நாழிகை-1 | க்ஷயம்-8 |
| திதி வர்த்தனை | நாழிகை-$5\frac{1}{2}$ | க்ஷயம்-$6\frac{1}{2}$ |

வருஷ மகாதிசை.

ஜனன நக்ஷத்திரமுதல் பங்குனிப் பூர்வபக்ஷப் பிரதமையன்றைய நக்ஷத்திரம் வரை எண்ணி 5-ல் பெருக்கி 9-ல் கொடுத்த மிச்சம்

1-க்கு சூரியன் நாள்-20,
2-க்கு செவ்வாய் நாள்-28,
3-க்கு குருநாள்-58,
4-க்கு கேது நாள்-21,
5-க்கு புதன் நாள்-56,
6-க்கு சுக்கிரன் நாள்-70,
7-க்கு சனி நாள்-36,
8-க்கு சந்திரன் நாள்-50,
9-க்கு இராகு நாள்-21,

ஆக நாள்-360.

இதில் எந்தத் திசைமுதல் தோன்றுகிறதோ அதிமுதலாக மேற்சொன்ன முறைப்படி வருஷதிசைபார்ப்பது மகாதிசைபோல் பலன்கொள்ளவும்,

மாதமகாதிசை

ஜனன நக்ஷத்திரமுதல் மாதம் பிறந்த நக்ஷத்திரம் வரை எண்ணிக்கண்டதொகையை 7-ல் பெருக்கி 9-ல் கொடுத்த மிச்சம்.

1-க்கு சூரியதிசை
2-க்கு புததிசை
3-க்கு இராகுதிசை
4-க்கு குருதிசை
5-க்கு கேதுதிசை
6-க்கு சந்திரதிசை
7-க்கு சனிதிசை
8-க்கு சுக்கிரதிசை
9-க்கு செவ்வாய் திசையாகக் கொள்வதாம்.

கிரகங்களின் மகாதிசை ஒவ் 1-க்கு நாள் காலாகக்கொள்வது,

இவற்றின் பலன்.

சூரியதிசை நாள் $1\frac{1}{2}$-க்கு அலைச்சல், கபாலநோய்
புததிசை நாள் $4\frac{1}{4}$-க்கு இலாபம், பந்து தரிசனம்
இராகுதிசை நாள் $4\frac{1}{2}$-க்கு நீச்சசிநேகம்
குருதிசை நாள் 4-க்கு போசன சௌக்கியம் தனலாபம்.
கேதுதிசை நாள் $1\frac{3}{4}$-க்கு தேகபீடை.
சந்திரதிசை நாள் $2\frac{1}{2}$-க்கு சுக்கிலபக்ஷமாயின் தனலாபம் கிருஷ்ணபக்ஷமாயின் தனநஷ்டம்.
சனிதிசை நாள் $4\frac{3}{4}$-க்கு விரோதம், குடும்பகலகம் ஆயுதவிரணம்.
சுக்கிரதிசை நாள் 5-க்கு ரத்தினாபரணலாபம்
செவ்வாய்திசை நாள் $1\frac{3}{4}$-க்கு போசன அசௌக்கியம் கலகம் என்றறிவதாம்.

நித்திய மகாதிசை.

சூரியனின்ற நக்ஷத்திரமுதல் அன்றைய நக்ஷத்திரம் வரை எண்ணிக்கண்டதொகையை 2-ல் பெருக்கி இதனோடு அவனவன் சனன நக்ஷத்திரமுதல் அன்றைய நக்ஷத்திரம் வரை எண்ணிக்கண்டதொகையும் ஞாயிறு முதல் அன்றையவாரம் வரையுள்ள தொகையையுங் கூட்டி 9-ல் கொடுத்துவந்த மிச்சம்.

1-க்கு சூரியதிசை
2-க்கு சந்திரதிசை
3-க்கு செவ்வாய்திசை
4-க்கு இராகுதிசை
5-க்கு குருதிசை
6-க்கு சனிதிசை
7-க்கு புததிசை
8-க்கு கேதுதிசை
9-க்கு சுக்கிரதிசை

இவையாகக்கொண்டு பலன்சொல்லுவது இது நித்திய மகாதிசையாம்.

மாதபலன்.

ஜன்மநட்சத்திரமுதல் மாதம் பிறந்த நட்சத்திரம் வரை எண்ணிக்கண்ட தொகையை ஏழிற் பெருக்கி எட்டிட் கழித்த சேடம்-

1-க்கு ரோகம்
2-க்கு இலாபம்
3-க்கு செலவு
4-க்கு அலைச்சல்
5-க்கு போஜன சௌக்கியம்
6-க்கு ஐசுவரியம்
7-க்கு கலகம்
8-க்கு கஷ்டமாம்

தினபலன்.

ஜன்ம நட்சத்திரமுதல் அன்றைய நட்சத்திரம் வரை எண்ணிக்கண்ட தொகையுடன் ஞாயிறுமுதல் அன்றைய வாரம் வரையிலும் பிரதமைமுதல் அன்றைய திதி வரையிலும் கண்ட தொகையைச் சேர்த்து ஒன்பதிற் கழித்த மிச்சம்.

1-க்கு வியாகூலம்
2-க்கு சுபம்
3-க்கு துர்வார்த்தை
4-க்கு பந்து
5-க்கு பெண்போகம்
6-க்கு சுபம்
7-க்கு கலகம்
8-க்கு ரோகம்
9-க்கு ஞானவாக்கியம்

## தாராபலன்

ஜன்ம நக்ஷத்திர முதல் அன்றைய நக்ஷத்திரம் வரை எண்ணிக்கொண்டு வந்ததொகையை ஒன்பதிற் கழித்து நின்ற மிச்சத்தில் 2-4 6-8-உத்தமம்.

| | | | |
|---|---|---|---|
| 1-வது | ஜன்மம் | 6-வது | சாதகம் |
| 2-வது | சம்பத்து | 7-வது | வதை |
| 3-வது | விபத்து | 8-வது | மைத்திரம் |
| 4-வது | க்ஷேமம் | 9-வது | பரமமைத்திரம் |
| 5-வது | பிரத்தியக்கு | | . சிலர் 9-வது தாரைசுபமென்பர் |

சிலர் முதற்பரியாயத்தில் ஜன்மதாரையும்
இரண்டாம் பரியாயத்தில் விபத்து தாரையும்
மூன்றும் பரியாயத்தில் பிரத்தியக்கு தாரையும்
மூன்று பரியாயத்திலும் வதைதாரையும் ஆகாவென்பர். மற்றவை கூடுமென்பர்.

| | | | |
|---|---|---|---|
| 1க்கு | சூரியனும் | 6-க்கு | சந்திரனும் |
| 2-க்கு | புதனும் | 7-க்கு | சனியனும் |
| 3-க்கு | ராகுவும் | 8 க்கு | சுக்கிரனும் |
| 4 க்கு | குருவும் | 9 க்கு | செவ்வாயும் |
| 5-க்கு | கேதுவும் | | அதிபதியாகக்கொள்வது. |

பலன்முறையே தாபம்-லாபம்-நாசம்-தைரியம்-கீர்த்தி லயம்-ஆனி-பிரமோதம்-மிருத்தியு.

1-க்கு-7. 3-க்கு, 3, 5-க்கும் 7-க்கும் -8, ஆகநாழிகை நீங்கிய மற்றைய நாழிகை சுபமாம்.

மயில்-குதிரை-ஆடு-யானை-காக்கை-நரி - சிங்கம் - கருடன்-அன்னம் இவை முறையே தாராவாகனங்களாம்.

பரிகாரம்.

| | | | |
|---|---|---|---|
| 1-க்கு | சாகதானம் | 5-க்கு | உப்பு |
| 3-க்கு | வெள்ளம் | 7-க்கு | எள்ளு |

9 க்கு பொன்தானஞ் செய்ய

சந்திர பலன்

ஜன்மராசிமுதல் அன்றையதினஞ் சந்திரனிருக்கிற ராசிவரைக்கு மெண்ணிக்கொண்டு வந்த தொகையில்

| | | | |
|---|---|---|---|
| 1-க்கு | தேக சௌக்கியம் | 7-க்கு | சௌக்கியவிர்த்தி |
| 2-க்கு | தன ஹாணி | 8-க்கு | ரோகவிர்த்தி |
| 3-க்கு | திரவியலாபம் | 9-க்கு | காரியதாமசம் |
| 4-க்கு | ரோகபயம் | 10-க்கு | உத்தியோகவிர்த்தி |
| 5-க்கு | காரியவிக்கினம் | 11-க்கு | இஷ்டார்த்த சித்தி |
| 6-க்கு | சத்துருநாசம் | 12-க்கு | தனவிரயம் |

சிலர் சுக்கிலபக்ஷத்தில் 2-5-9-உத்தமமென்றும், கிருஷ்ணபக்ஷத்தில் 4-8-12- உத்தமமேன்றும் சொல்லுவார்கள்.

சித்திரைமாதப் பிறப்பின் பலன்.

சித்திரைமாதப் பிறப்பு,

| | |
|---|---|
| ஞாயிற்றுக்கிழமையாகில் | அற்பமழை |
| திங்களாகில் | வெள்ளங்காணும், |
| செவ்வாயாகில் | கலகமுண்டு, |
| புதனாகில் | காற்றதிகம், |
| வியாழமாகில் | சுபமுண்டு, |
| வெள்ளியாகில் | பெருமழையுண்டு, |
| சனியாகில் | மழையில்லை, |

மேலும் விஷ்டி-அஷ்டமி-உவா-இருத்தை ஆகாவாம். மூன்றுத்திரங்கள் அஸ்தம்-திருவோணம்-அவிட்டம் ரேவதி-மிருகசிரம்-மூலம்-உத்தமம்.

சோதி-சித்திரை-ரோகணி-சதையம்-புனர்பூசம்-பூசம் மகம்-அச்சுவினி-அனுஷம் மத்திமம்,
மற்றவை ஆகாவாம்,

### அர்க்கபலன்.

ஞாயிறுமுதல் சங்கிரமவாரம் வரையிலும்,
பிரதமைமுதல் சங்கிரமதிதி வரையிலும்,
அச்சுவினிமுதல் சங்கிரம நக்ஷத்திரவரையிலும்,

எண்ணி மூன்று தொகையும் கூட்டிமூன்றிற்கழித்த மிச்சம் 1-க்கு சமார்க்கம், 2-க்கு அதியார்க்கம், 3-க்கு சூனியார்க்கம் இப்படியாக மாதமாதம் தானியவிலை யறிபவும், ஆடிமாதம் சூனியார்க்கமாக வேண்டும்.

### ஆவணிமுழக்கம் ஆவணிமூலம்.

ஆவணிமீ 6உக்கு மீறினல் நல்லமழையுண்டு

### ஆவணி பொழுதுகட்டுங் குறி.

ஆவணிமூலத் துதையங் கதிர்மறைன்
மேவுமூலகில் விளைவுண்டாம்—பூவில்
வெயிலெறிக்குமாயின் வீணேயுலகில்
எரிபரக்குமென்றே யியம்பு.

### நக்ஷத்திரம் விழுமாதங்களின் பலன்.

சித்திரை-பங்குனி-கார்த்திகை - மார்கழி - ஆவணிமாதங்களில் நக்ஷத்திரம் உதிருமாயின் அரசனுக்குப் பீடை.
தை-ஐப்பசி-ஆடி-மாசி மாதங்களில் உதிருமாயின் தானியம் குறையும்,
ஆனியில் உதிருமாயின் மந்திரிக்கரிஷ்டம்
புரட்டாசியில் விழுமாயின் நோயுண்டாம்
வைகாசியில் விழுமாயின் மழையில்லையென்றறிக

கலி.

ஆடுகயல்தேள் தனுசுசிங்க மெழுமீன் விழுவேலா சழிவாம்
கோடுமகரந் துலையலவன் கும்பமஃகங்குறைந்திடுமே
தேடுமிதுனமந்திரிசாம் தெரிவையுந்தம்பிணிபெரிதாம்
ஓடுமிடபமழையில்லை யுடுவிழ்குறியென்றறிந்துரையே,

ஆடி ஐந்தாந்தேதிப்பலன்.

ஆடிபிறந்தவைந்தாநா ளன்றுபுதனேயாமாயின்
நாடுவிளையுமொருபேச நல்லவியாழமிருபோகம்
நீடுசெவ்வாய்கதிர்சாவி நெடியபுகர்க்குமழையுண்டாம்
கூடுதிங்கள் மழைமந்தன் குலவுவெய்யோன் பயிர்நாசம்.

ஆடிமாசம் உத்திராடக்காற்று.

ஆடிமாதம்-உத்திராடநக்ஷத்திரத்தில். உதயத்தி கிழ்காற்றடித்தால் பின்மாரியுண்டாம்,

அக்கினி மூலைக்காற்றும் தென்காற்றுமடித்தால் கலகமும் பஞ்சமுமுண்டாம்.

தென்மேற்குக் காற்றடித்தால் விளைவில்லை,

மேல்காற்றும் வடகாற்றும் அடித்தால் நல்ல மழையுண்டு.

வடமேற்குக் காற்றடித்தால் மிருக பலிப்பும், விட்டிலும், புழுவும் உண்டாகும்.

வடகிழக்கு காற்றடித்தால் முன்மாரியுண்டாம் அப்போது பூரணையுங்கூடினால் உத்தமம், அன்றுவுதயத்தில் பொழுது கட்டினால் நல்ல மழையுண்டு.

ஆடிமீ பஞ்சமிக்குறி.

ஆடிமீ வளர்பிறைப் பஞ்சமி ஞாயிற்றுக்கிழமையில் வரில் கொஞ்சமழையுண்டு.

திங்கட்கிழமையில் வரில் வெள்ளங்காணும்.
செவ்வாய்க்கிழமையில் வரில் சண்டையுண்டாம்,
புதன்கிழமையில் வரில் பெருங்காற்றடிக்கும்,
வியாழக்கிழமையில் வரில் நல்லவிளைவு.
வெள்ளிக்கிழமையில் வரில் பெருமழையுண்டு
சனிக்கிழமையில் வரில் விளைவில்லை.

## ஆடிமாசத் திதிக்குறி.

ஆடிமீ வளர்பிறை நவமியும், சோதிநக்ஷத்திரமுங் கூடினநாளில் மந்தாரமானது, மழையாவது, காற்றுவது குமுறலாவது, மின்னலாவது உண்டானால் முன்மழை.

தசமியும், விசாகமுங் கூடினபோது இக்குறியுண்டாயின் நடுவில் மழை

ஏகாதசியும், அனுஷமுங் கூடினபோது இத்தேதியுண்டாயின் பின்மழையாம்.

ஆடிமாதம் தேய்பிறைத் தசமியுடனேயாவது ஏகாதசியுடனேயாவது ரோகணி நக்ஷத்திரங் கூடினபோது பொழுதுகட்டினால் நல்லமழையுண்டு.

## கர்ப்போட்டம்.

ஆனிமாதத்துக்கு கர்ப்போட்டநாள் $1\frac{1}{2}$

ஆடிமாதமுதல் கார்த்திகைமாதம்வரை மாதம் 1-க்கு நாள் $2\frac{1}{2}$ ஆ மாதம் 5-க்கு நாள் $11\frac{1}{4}$.

மார்கழி மாதத்துக்கு நாள்-1

தைமாதமுதல் வைகாசிமாதம்வரை மீ 5-க்குமீ 1க்கு நாழிகை 12 ஆக நாள்-1.

ஆக கர்ப்போட்டநாள் $14\frac{3}{4}$.

இவை பூராட நக்ஷத்திரத்தில் சூரியன் வரும் நாளாம்

கவி.

பானுனுதனுவிற் பதின்மூன்றே முக்கால்மேல்
ஆனிக்குக்கர்ப்ப மறுகாலாம்—மானேகேள்
நண்டுமுதற்றேளளவு நாலரை நான்மாகாணி
கொண்டதனுவுக் கொன்றே கூறு.
தைமுதல் வைகாசிவரைத் தானஞ்சாகும் மதிக்கு
மெய்யாய் நாளொன்றே விளம்பு.

பரிவேடக்குறி.

ஆடிமீ பூரணையில் முதற்பத்து நாழிகையில் சந்திரனை பரிவேடமிட்டால் ஐப்பசியிலேயும் 2-ம் பத்திலிட்டால் கார்த்திகையிலேயும் 3-ம் பத்திலிட்டால் மார்கழியிலேயும் நல்ல மழையுண்டு.

அன்றிராத்திரி முழுமையும் இருட்டிருந்தால் அம்மூன்று மாதங்களிலும் அடைமழையாம்.

கவி.

கடகமாதப் பூரணைராத்திரி
கனத்தசந்திரனைப் பரிவேடமே
இடின்முதற் பத்திலேப் பசிக்காமழை
இங்கு கார்த்திகைக்கா நடுப்பத்ததே
விடிநேரங்கடை மார்கழிப்பரி
வேடமுப்பது நாழிகையும்மிட
அடைமழை யிந்த மூன்றுமதிக்குமென்
ருயந்த முத்தமிழோர்க ளறைந்தனர்.

சந்திரனை குரு-சுக்கிரருடனே பரிவேடமிட்டால் நல்ல மழையுண்டு.

செவ்வாய்-சனியுடன் பரிவேடமிடில் மழையில்லை.

கிராணகாலத்தில் பரிவேடமுண்டானால் ராஜாக்களுக்கு ஆகாது.

மகவோட்டம்.

மாசிமாதம் பௌர்ணமியில் சந்திரனும், மகநக்ஷத்திரமும் உச்சமாகும் போது.

| மதிக்கு வடக்கில் நக்ஷத்திரம் | | | | மதிக்கு தெற்கில் நக்ஷத்திரம். | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 1-தள்ளில் | $\frac{1}{4}$-பங்கு | நாசம் | | 1-தள்ளில் | $\frac{1}{4}$-பங்கு | சுபம் | |
| 2 | ,, | $\frac{1}{2}$ | ,, ,, | 2 | ,, | $\frac{1}{2}$ | ,, ,, |
| 3 | ,, | $\frac{3}{4}$ | ,, ,, | 3 | ,, | $\frac{3}{4}$ | ,, ,, |
| 4 | ,, | 1 | ,, ,, | 4 | ,, | 1 | ,, ,, |

காணுமாசிக் கலைமதியைக் கருதுமகமீ னுன்கதனில்
பேனுந்தென்பான்மீன் சேரில் பெரிதாமஃகந்தானென்ப
பூணிரண்டு முக்காலாம் பொருந்து மூன்றிற் பாதியாம்
சேணில்வடபால்மீன் சேரில் செகத்திலன்னஞ் சிறிதாமே

மூன்றாம் பிறை.

பங்குனியும்-சித்திரையும் தென்கோடுயரவேண்டும் வைகாசிமுதல்-மார்கழி வரை வடகோடுயரவேண்டும் தையும்-மாசியும் சமனாக இருக்கவேண்டும், இல்லாவிடிற் கலகமும் பஞ்சமும் உண்டாம்.

கவி.

மீனுடுதெற்குயர மிக்கெட்டுமேவடக்காம்
தான்மகரகும்பஞ்சரியாக—மானேகேள்
சொன்னபடிசோம னிரானெனிலோகோன்மடிவல்
அன்னமரிதாய் விடும்.

பிரதமை-துதியையும் ஞாயிறு-வியாழன-வெள்ளியும் பிறை பார்க்க நல்லது, சதுர்த்தசி ஆகாது.

### வானவிற்குறி.

ஆனி-ஆடி-ஆவணி இந்தமாதங்களில் கிழக்கே இந்திர வில்லுண்டானால் பஞ்சமுண்டாகும்,

### கவி.

ஆனியுடனாடி யாவணியித்திங்களிலே
கூனியேவான்விற் குண திசையில்—மானேகேள்
மேவின்மழையறுமே விண்ணுடருக்குமே
பூவின் விழவருந்து போம்.

### சோதிமின்னல்.

ஐப்பசிமாதம் சோதி நக்ஷத்திரத்தில் சூரியன் வரும் நாளில கிழக்கில் மின்னின் மழையுண்டு.

### மழைக்குறி.

வைகாசிமாதம் தேய்பிறைச் சதுர்த்தசியில் மழை பெய்யின் நல்ல மழையுண்டு.

### தேதிமழை.

| | | | |
|---|---|---|---|
| ஆனிமீ | 10உ | ஐப்பசிமீ | 2உ |
| ஆடிமீ | 8உ | கார்த்திகைமீ | 1உ |
| ஆவணிமீ | 6உ | மார்கழிமீ | 1உ |
| புரட்டாசிமீ | 4உ | | |

இவைகளில் மழை பெய்யின் நல்ல மழையுண்டு

### பஞ்சகம்பார்க்க

பஞ்சகம் பார்க்கவேண்டிய காலம் வரையில் ஞாயிறு முதலாக அன்றைய வாரம்வரையும், பிரதமைமுதலாக அன்றையத் திதிவரையும், அச்சுவினி முதல் அன்றைய

நக்ஷத்திரம்வரையும், மேஷமுதல் அப்போதய லக்கனம் வரையும் எண்ணிக் கண்டதொகையை 9-ல் கழித்த மிச்சம் 3-5-7 9-உத்தமம், மற்ற 1-2-4-6-8 நீக்கப்படும்.

| | |
|---|---|
| 1-மிருத்தியு பஞ்சகம் | 6-சோர பஞ்சகம் |
| 2-அக்கினி பஞ்சகம் | 8-ரோக பஞ்சகம் |
| 4-ராஜ பஞ்சகம் | இவ்வாறுகண்டுகொள்க. |

அவசியமாய்ப் பார்க்கவேண்டும்போது பகலில்ராஜ பஞ்சகமும்- அக்கினி பஞ்சகமும், இரவில்சோரபஞ்சகமும் ரோகபஞ்சகமும், எல்லாக்கர்மங்களிலும் மிருத்தியு பஞ்சகமும் ஆகாவாம்.

புதனில் மிருத்தியு பஞ்சகமும்-
சனியில் சோர பஞ்சகமும்.
வியாழம்-வெள்ளியில் இராஜ பஞ்சகமும்.
செவ்வாயில் அக்கினி பஞ்சகமும்.
ஞாயிறில் ரோகபஞ்சகமும் ஆகாவாம்.

சிலர் திங்களில் ராஜபஞ்சகமும், புதன் - வியாழங்களில் சோரபஞ்சகமும், வெள்ளி-சனியில்மிருத்தியுபஞ்சகமும்ஆகாவென்பர் முக்கியமாய்விவாகத்துருவங் கூட்டிப் பார்க்கவேண்டும்.

வடதேசங்களில் சுக்கில பிரதமைமுதலாகக்கூட்ட வேண்டுமென்பர்.

இப்படிப் பலவிதமாகக் கூறினும் தேசவழக்கப்படியே பார்க்கவேண்டுமென்பதே துணிவு,

பஞ்சிகதுருவம்.

| | | | |
|---|---|---|---|
| ஞாயிற்றுக்கிழமைக்கு | 15 | வியாழத்துக்கு | 8 |
| திங்களுக்கு | 10 | வெள்ளிக்கு | 8 |
| செவ்வாய்க்கு | 12 | சனிக்கு | 3 |
| புதனுக்கு | 3 | | |

இவ்வாறு துருவங்கூட்டிப் பார்க்கவும்

திங்கள்பத்துத் தினகரன் மூவைந்து
தங்குபொன்புகர் தானுமோரெட்டதாம்
துங்கமால்சனி மூன்றுரவிராம்
பொங்கமாகுந் துருவம் புகன்றிடின்.

இன்னுமொருவித்துருவர்

| | | | |
|---|---|---|---|
| மேஷசிங்கங்களுக்கு | 4 | கன்னிமீனங்கட்கு | 3 |
| இடபகர்க் ககங்கட்கு | 5 | விருச்சிக-தனுசு-மகரங்களுக்கு | 1 |
| மிதுனத்துக்கு | 6 | | |
| துலா-கும்பங்கட்கு | 2 | | |

இவ்வாறு துருவங்கூட்டிப் பார்ப்பதும் ஒன்று.

கவி.

மரியரியொருநான்காமற் றெருதுநண் டைந்ததாகும்
பெருகிய மிதுனமாறும் பெருந்துலே குடமும்ரெண்டாம்
அரிவைமீன் மூன்றதாகு மானதேள் தனுமானென்றே
வருவது பஞ்சிகத்தில் வண்மையாந் துருவங்கூட்டே.

இன்னுமொருவித்து வரும்.

| | | | |
|---|---|---|---|
| மிருத்துபஞ்சகத்துக்கு | 4 | அக்கினிபஞ்சகத்துக்கு | 12 |
| சோரபஞ்சகத்துக்கு | 5 | ரோகபஞ்சகத்துக்கு | 15 |
| இரஜபஞ்சகத்துக்கு | 10 | | |

இவ்வாறு துருவங்கூட்டிப் பார்க்கவும்.

கவி

திதிவார மிராசியுட னுண்மீன்சேர்த்து
செப்பியநான் கெட்டீரைந் தீராரேடு
பதிபுகழு மூவைந்து முறையேகூட்டிப்
பகரொன்ப திற்கீந்த சேடமென்று

விதியாறு நான்குமோ ரிரண்டுமெட்டும்
மிருத்திசோ ரம்ராஜ மக்கினிரோகம்
மதிமகதற்குஞ் சனிக்துநற் குருபுகர்க்கு
மவிர்திங்கள் செவ்வாய் நல்லருக்கற்காகா.

## அன்றைய நக்ஷத்திரம் பார்க்க

சித்திரைமாதமுதல் சென்றமாதத்தை இரட்டித்து இதனோடு சுக்கிலபக்ஷம் பிரதமைமுதல் அமாவாசியை வரையிலுஞ் சென்ற திதிகளையுங்கூட்டி-27-க்கு உட்படின் அதில் ஒன்று தள்ளவும், 27-க்கு மேற்பட்டால் 27-ம் தள்ளி நின்றதை அசுபதி முதல் எண்ணிக்கண்ட நாள் அன்றைய நாளாம்.

## நக்ஷத்திர கந்தாயபலன்

பங்குனிமாதம் பூர்வம் பக்கப்பிரதமையில் அன்றைய திதிவார நட்சத்திர யோககரணங்களை அவ்வாதிதொட்டெண்ணிக் கண்ட தொகையை.

3-ல் பெருக்கி 8-ஆல் கொடுத்தசேடம்முதற்கந்தாயம் 7-ல் பெருக்கி-3-ல் கொடுத்த சேடம் இரண்டாங் கந்தாயம்.

3-ல் பெருக்கி 5-ல் கொடுத்த சேடம் மூன்றாங் கந்தாயமாம்.

| | |
|---|---|
| 1-வது பூச்சியம் | வியாதி |
| 2-வது பூச்சியம் | கடன் |
| 3-வது பூச்சியம் | சொற்பபலன் |
| மூன்றும் பூச்சியம் | அசௌக்கியம் |
| மூன்றும் பூச்சியமில்லையாயின் | சௌக்கியமாம் |

ஆண்பெண்ணறிய

பெண்ணினுடைய பெயரெழுத்தை யொற்றுன் படவெண்ணி 3-ல் பெருக்கி வளர்பிறைத் திதியாதி அன்றையவரைத் திதியுங்கூட்டி 7-க்குக் கொடுத்த மிச்சம் ஒற்றையாயின் ஆண் இரட்டையாயின் பெண்ணென அறிவது,

கவி

காரிகை கர்ப்பந்தன்னைக் கருத்தினு லறியவேண்டின்
பேரெழுற்றொ ரேடெண்ணி பெட்புடன மூன்றிற்றுக்கி
வாருறு மாதேமுன்னு மருவா திபகஷங்கூட்டி
ஏருமேழ்க் கீந்தசேட மிரட்டை பெண் ணொற்றையானே.

உதய ஆரூடக் கவிப்புராசிகள்

ஆரூடங் கேட்ட ராசி உதயராசியாம், ஆரூடங் கேட்போன் சொன்ன லக்க முதலியவைகளின் ராசி ஆரூடராசியாம் கவிப்புராசிகன்னி-துலா-மீனங்களுக்கு-இடபமும், மிதுன-கர்க்கடக-சிங்கங்களுக்குமேடமும், தனுசு-மகர-விருச்சிக-கும்பங்களுக்கு மிதுனமுமாகும்.

கவி

கன்னிகோல் மீனமாயின் கவித்திடும் விடையாமென்பர்
மன்னுசெவ்வரியாழ்நண்டு வரின் மேடங்கவிக்குமென்பர்
கொன்னவிற் சுறுதேள்கும்பங் குலவில்மிதுனமாகும்
இன்னவா றுதயராசிக் கியம்புவர்கவிப்புத்தானே.

ஆரூடம்.

ஆரூடராசி முதலாகச் சூரியனின்ற ராசிவரை எண்ணிக் கண்ட தொகையை உதயராசி முதலாகவெண்ணிக் கண்ட ராசிநாதனைக் கொண்டு பலன் சொல்லவும்.

கவி.

ஆருட ராசிதொட்டே யாதித்த னளவுமெண்ணிச் சேருமத் தொகையை யப்போசிறந்த ராசியில் வைத்தெண்ணி, நேருறு ராசிநாதனின்றவனுரூடத்தைச், சிருடனுரைப்பதென்றே செப்பினர் கணித நூலோர்.

இன்னுமொரு விதம்

உதய லக்கனந்தொட்டு அந்த லக்கனுதிபதி நின்ற இராசிவரை எண்ணிய தொகை ஒற்றையாயின் உத்தமம், இரட்டையாயின் மத்திமமாம்.

வியாதிப்படின் தீராதநாள்.

சோதிசதயமுப்பூரஞ் சொல்லுமாயிலுடன் கேட்டை, தீதாம்பரணி யாதிரைநாள் செவ்வாய் சனி ஞாயிறு வாரம், ஓதுநவமி துவாதேசி யுற்ற சதுர்த்தி சஷ்டியினில், பேதைமடவாய் பிணிகொள்வோர் பிரமன்வரினும் பிழையாரே.

வியாதிச் சக்கரம்

ஒன்றுக்குளொன்றுக 3-சதுரங்கீறி 4-மூலைகளும் 3-சதுரத்தின் மூலைகளுஞ் சேரும்படி ஒவ்வொருவரைகீறி 4 பக்கங்களிலும் நடுவில் மூன்று வரையுஞ் சேரும்படி ஒவ்வொருவரை கீறில் 24-பொருந்தாகும் - இவற்றுடன் உள் சதுரத்தின் நடுவரை நான்கின் முனையிலும் 4-புள்ளியிட்டால்-28- ஆகும்-

இதன் கீழ்த்திசையில் சூரியனின்றநாளை வைத்து அபிசித்துடன் வலமாக வியாதிப்பட்டவன் சனன நக்ஷத்திரவரையில் எண்ணிக் கண்டநாள் பிராணன்.

கீழ்த்திசையில் வியாதிப்பட்டவன் நாளை வைத்து முன்போல் சந்திரனின்ற நாள்வரை எண்ணிக் கண்ட நாள் தேகம்.

கீழ்த்திசையில் கார்த்திகையை வைத்து அபிசித்துடன் இடமாக வியாதிப் பட்டனுள்வரை எண்ணிக் கண்ட நாள் மிருத்தியுவென்றறிந்து மிருத்தியுந் தேகமும் ஒருவரையில் ஒரு பொருத்தில் வந்தாலும் மிருத்யுதிம் பிராணனு முன்போல் வந்தாலும் வருத்தப்பட்டுத் தேறுவான்.

பிராணன் - தேகம் - மிருத்தியும் இம்மூன்றும் ஒருவரையிலாவ ஒரு பொருத்திலாவது நின்றால் உடனே மரணம், மேற்சொன்ன மூன்றும் ஒரு பொருத்திலிருப்பது அதி குரூரமென்றறிக.

### திசாபுத்தி பிரிக்க

திசாநாதனுடைய மகாதிசை வருஷத்தையும் புத்திரநாதனுடைய மகா திசை வருஷத்தையும் பெருக்கிக் கண்ட தொகையின் எண் 1-க்கு 3-நாளாகக் கொள்வது புத்தியாம்.

கவி

கோள்களின் றிசையிற்புத்தி குறித்திடத்திசை யோனுண்
னின் புத்தி நாதனுண்ட வேர்படப் பெருக்கிக்கண்ட [டை
வாளமர் தொகை யொன்றிற்கு மருவுநாண் மூன்றதாரும்
வாள்கடல் கொண்டைவண்டு வனசமாம் விழியினாளே.

அந்தரம் பிரிக்க.

கிரகங்களின் புத்தியில் வந்தவருஷம் 1-க்கு நாள் 3-ஆகவும், மாதமொன்றுக்கு கால் நாளாகவும் நாள் 1-க்கு அரைநாழிகையாவுங் கண்டு அவ்வக்கிரகங்களின் திசா வருஷங்களில் பெருக்கின தொகையை அவ்வக்கிரகங்களின் அந்தரமென்றறிவது.

கவி.

அவரவரபகாரத்தி னுண்டொன்றில் மூன்று நாளும்
நவிலுமாதங்கால்நாளுநாளொன்றிற் பாதிக்கன்னல் [ந்த
இவைமூன்று ந்சையுங்கோட்கடிசையாண்டிற்பெருக்கில
தவலறு தொகையைச் சேர்க்கத்தான்வரு மந்தரந்தான்

அந்தராந்தரம் பிரிக்க.

கிரகங்களின் அந்தரத்தில் வந்தநாள் 1-க்கு அரை நாழியாகவும் நாழிகை 1-க்கு அரைவிநாடியாகவும் கண்டு அவ்வக்கிரகங்களின் திசாவருஷங்களாற் பெருக்கின தொகை அவ்வக்கிரகங்களின் அந்தராந்தரமாகும்.

கவி

ஒருநாளைக்கோரரை நாழிகையாத்தோற்றும்
ஒருநாழிகைக் கரைவிநாடி—துருவமாம்
எந்த திசைக்கு மிவர்வருடங் கொண்டெண்ண
அந்தமாமுள்ளந் தரம்-

சூக்ஷமம் பிரிக்க.

கிரகங்களின் நாழிகை 1-க்கு அரை விநாடியாகவும், விநாடி 1-க்கு அரை விகலையாகவும் கொண்டு முன் போலப் பெருக்கிக்கொள்ளவும், இது சூக்ஷமம்.

ருதுவாரம்.

| | | | |
|---|---|---|---|
| ஞாயிறு | புத்திரரில்லை | வியாழம் | தனமுண்டு |
| திங்கள் | பதிவிரதை | வெள்ளி | சுகமுடையாள் |
| செவ்வாய் | விதவை | சனி | தரித்திரியாம் |
| புதன் | புத்திரருண்டாம் | | |

ருது நட்சத்திரம்.

| | | |
|---|---|---|
| அக்சுவினி | ... | விதவை |
| பரணி | ... | புத்திரவதி |
| கார்த்திகை | ... | மலடி |
| ரோகணி | ... | நன்மையுடையவள் |
| மிருகசிரம் | ... | புருஷற்கினியன் |
| திருவாதிரை | ... | வெறுப்புள்ளவள் |
| புனர்பூசம் | ... | சுகமுடையவள் |
| பூசம் | ... | சீருடையவள் |
| ஆயிலியம் | ... | வயிறழிவு |
| மகம் | ... | பத்தாவுக்குநல்லவள் |
| பூரம் | ... | மலடி |
| உத்திரம் | ... | பிரயோசனவதி |
| அஸ்தம் | ... | நல்லவள் |
| சித்திரை | ... | அறிவுள்ளவள் |
| சோதி | ... | குடும்பம் |
| விசாகம் | ... | அமங்கலை |
| அனுஷம் | ... | ரோகி |

| | | |
|---|---|---|
| கேட்டை | ... | பரஸ்திரீ |
| மூலம் | ... | பாலுடையவள் |
| பூராடம் | ... | அடிமைதேடும் |
| உத்திராடம் | ... | தர்மிஷ்டி |
| திருவோணம் | ... | பாக்கியவதி |
| அவிட்டம் | ... | பொருளுடையவள் |
| சதயம் | ... | பொருளழிவு |
| பூரட்டாதி | ... | மலடி |
| உத்திரட்டாதி | ... | தரித்திரி |
| ரேவதி | ... | ரோகி |

ருதுலக்கின இடம்.

| | |
|---|---|
| மேஷஞ்-சிங்கம் | வீட்டிற்குப்புறத்தில் |
| ரிஷபம் | பசுத்தொழுவத்தில் |
| துலாங்-கன்னி | நால்வர்க்கு நடுவில் |
| விரிச்சிகம்-மிதுனந் | துயிலவிழ்த்தடுக்கையில் |
| தனுசு-கும்பம் | வீட்டிற்குள்ளே |
| கடகம்-மகரம்-மீனம் | தண்ணீர்க்கரையில் |

ருதுலக்கின பலன்.

| | |
|---|---|
| மேஷம்-விருச்சிகம் | பரஸ்திரீ |
| ரிஷபந்-தனுசு-கன்னி-மிதுனம் | வியபசாரி |
| கர்க்கடகம் | ஒழுக்கமில்லாதவள் |
| சிங்கங்-கன்னி | நெறியுடையாள் |
| துலாம் | பாட்டாளி |
| மகரம் | கற்புடையாள் |
| கும்பம் | பொருளுண்டாம் |

## ஆரூடத்திற்கு.

| திக்கு. | உடை. | பலன் | சந்ததி. |
|---|---|---|---|
| கிழக்கு | வெள்ளை | சோரம்போவாள் | 7 |
| தென்கிழக்கு | கறுப்பு | ,, | 1 |
| தெற்கு | நீலம் | ,, | 0 |
| தென் மெற்கு | வெள்ளை | ரோகி | 4 |
| மேற்கு | அழுக்கு | நல்லது | 6 |
| வடமேற்கு | மஞ்சட்கலந்த சிவப்பு | சக்களத்தியுடையவள் | 6 |
| வடக்கு | துவரைவண்ணம் | செல்வமுண்டு | 0 |
| வடகிழக்கு | நல்லது | தரித்திரம் | 0 |

## ருதுத்திதி.

| | | | |
|---|---|---|---|
| பிரதமை | கன்னி | நவமி | துக்கி |
| துதியை | அழகு | தசமி | தர்மிஷ்டி |
| திரிதியை | இன்பமுடைய | ஏகாதசி | துக்கி |
| சதுர்த்தி | சத்துருவுண்டு | துவாதசி | பலமுடையவள் |
| பஞ்சமி | புத்திரருண்டு | திரயோதசி | கோபி |
| சஷ்டி | ஆசாரமுடையவள் | சதுர்த்தசி | சோரம்போவ |
| சத்தமி | புத்திரருண்டு | அமாவாசியை | பாட் |
| அஷ்டமி | பெற்றிழப்பாள் | பௌர்ணமி | டாளி |

### கவி

உத்திராடமாதியா மாறுமாறுமுத்தமம்
பித்தனார்பிறந்தநாள் பின்னைபேழுமத்திமம்
அத்தமோடுசித்திரை யனந்தவாழ்வு குன்றிடும்
மற்றையாறுதன்னிலே மங்கைநூலிழப்பளே.

ருதுபாவம்.

ருதுலக்கனத்துக்கு ஏழில்.

| | |
|---|---|
| ரவியும்-இராகுமிருந்தால் | விதவை |
| மதியிருந்தால் | புத்திரநாசம் |
| செவ்வாயிருந்தால் | வேசை |
| புதனிருந்தால் | மலடி. |
| குருவிருந்தால் | நல்லது |
| சுக்கிரனும்-சனியுமிருந்தால் | குலவீணியாவாள் |
| கேதுவிருந்தால் | உறவுக்குவிரோதி |

ஏழாமிடம் சுத்தமாயின் எல்லாருக்கும் நல்லவளாக விருப்பாள்.

கவி.

கன்னிதிரண்ட நாழிகையிற் கண்டராசி தனக்கேழில்
மன்னிப்பரிதி யுறவிதவை மதியாகிற் புத்திரநாசம்
துன்னுஞ்சேயேல் வேசைபுதன் சொல்லுமலடியாமென்றே
பொன்னின்றிடில் நன்றாம்புகரும் பொல்லாச்சனியேல்
[குலவீணி.

ஈனராகு வெனில் விதவையென்பார் கேதுநின்றிடிலோ,—மானவுறவோர்க் குப்பகையே யாவாள் மதிழுமேழிடமோ,—மானே சுத்தமாவிருக்கின் மற்றுள்ளோர்களனைவருக்கும்,—தானே நல்லளாயிருப்பள் சம்பத்துடனே வாழ்வாளே.

அஷ்டகவர்க்குச் சக்கரம்

அஷ்டகவர்க்குச்சக்கரம் அறிவா லறிந்துபின்
சொற்றக்கேள காகிதத்தாற் சூழ்ந்து சக்கிரகத்தரிவெட்
டானஇவான் றொன்றிற்குக் காலங்குலந்தான் குறைவா
யூனமில்லாதே செவ்வா யோர்ந்து.

ஓர்ந்தவையொன்றாகச்சேர்த்துருகாணிமத்தியிலூன்
றிநீர்ந்திசைசத்துப்பின்னீரா றில்லமைய-நேர்ந்துகிழித்
திறவட்டத்தி லெழுதிரா றிலக்கம்வரை
கூறுமென்றில்லோரைக் கொண்டு.
கொண்டதற்கு மேற்பரிதி கூன்மதிசேய் மாலசீவன்
தனுசுங்கன் காரிநிலை மேலாகக் கொண்டுமுனஞ்
சொன்னவட்ட வர்க்கத்தைத் தோன்றத் தனித்தனியே
பன்னிரண்டில் படைத்துப்பார்.

(இ-ள்) அஷ்டவர்க்குச் சக்கரம் செய்யும்வகை யாதெனில், வெள்ளைக்காகிதத்தில் வட்ட வடிவாக ஓரளவிற்கு ஒன்றைறக்கத்தரித்து அதற்குத் தனித்தனி காலங்குலங் குறைவாக எழுவட்டங்கள் செய்து அடியிற் பெருவட்டமும் அதற்குமேல் சிறுவட்டங்களை யடுக்கி அவற்றினடுவில் திருவாணியொன்றை உறகவிட்டு முடுக்கிய பின்பு (12) வீடுகளமையப்பண்ணிச் சக்கரத்தின் படிப்போல் கோடுகள் வரைந்து அடிப்பெருவட்டத்தில் இலக்கனமும் அதன்மேல்வட்டங்களிலே சூரியன் - சந்திரன்- செவ்வாய் - புதன் - வியாழம் - வெள்ளி - சனி இவைகளை நிறுத்திமுன் சொன்ன கிரகாஷ்டகத் தாக்கின்படி தனித்தனி அந்தந்தச் சக்கரத்திலமைய ஒன்றுமுதல் பன்னிரண்டு வீடுவரையிலும் எந்த வீட்டிற்கு எந்த வாக்கு வருகிறதோ அந்த வீட்டில் அந்த வாக்கு அமைய எழுதிப் பார்க்க அஷ்டவர்க்கமும் சர்வாஷ்டவர்க்கமும் வெகு சுத்தமாகக் கண்டு கொள்ளலாகும். மற்றப்படி பழைய வழக்கங்கொண்டு பலகரை வைத்துச் சமுசயங்கொள்ளில் வெகு பிரயாசையடைவது மல்லாமல் சிலசமயத்தில் இந்த வீட்டின் பலகரை அந்த வீட்டிலும் அந்த வீட்டின் பலகரை இந்தவீட்டிலும் கலந்து கணக்கு பிசகிப்போகும். அதிகநேரமுஞ் செல்லும் ஆகையால் அஷ்டவாக்கங்

களுக்குச் சக்கரத்தை அலக்ஷியம் செய்யாமல் பார்க்கவும், பார்க்கும்போது ஒன்றென்னுந் துகையை சூரியனாகவும், இரண்டென்னுந் துகையை சந்திரனாகவும், மூன்றென்னுந் துகையை செவ்வாயாகவும், நான்கென்னுந் துகையை புதனாகவும் ஐந்தென்னுந் துகையை வியாழனாகவும், ஆறென்னுந் துகையை வெள்ளியாகவும், ஏழென்னுந் துகையை சனியாகவும் கொள்க, அஷ்டவர்க்கமாகவுன் பின்னும் என்றும் வீடுமுதல் பனிரெண்டாம்வீடுவரையில் அந்தந்த வீட்டிலமைந்திருக்கின்ற அந்தந்தவர்க்குகளைத் தனிக் கூட்டில் அதுவே அந்த இராசிக்கு சர்வாஷ்டகமாகு மென்பதாம்.

அஷ்டகவர்க்கம்.

| | | | |
|---|---|---|---|
| சூரியன் பால்-4-8-க்கு விபரம். | ரவி 1-2-4-7-8-9 10-11 | ஆக | 8 |
| | மதி 3-6-10-11 | ,, | 4 |
| | குசன் 1-2 4-7-8-9-10-11 | ,, | 8 |
| | புதன் 3-5-6-9 10-11-12 | ,, | 7 |
| | குரு 5-6-9-11 | ,, | 4 |
| | புகர் 6 7-12 | ,, | 3 |
| | சனி 1-2-4-7-8 9-10-11 | ,, | 8 |
| | லக்கனம் 3-4-6 10-11-12 | ,, | 6 |
| சந்திரன் பால் 4-9-க்கு விபரம். | ரவி 3-6-7-8-10 11 | ஆக | 6 |
| | மதி 1-3-6-7-10-11 | ,, | 6 |
| | குசன் 2-3-5-6-9-10-11 | ,, | 6 |
| | புதன் 1-3-4 5-7-8-10-11 | ,, | 8 |
| | குரு 1-4-7-8-10-11-12 | ,, | 7 |
| | புகர் 3-4 5-7 9-10-11 | ,, | 7 |
| | சனி 3 5-6-11 | ,, | 4 |
| | லக்கனம் 3-4-10-11 | ,, | 4 |

| | | | |
|---|---|---|---|
| செவ்வாய் பால் 39-க்கு விபரம் | ரவி 3-5-6-10-11 | ஆக | 5 |
| | மதி -3-6-11 | ,, | 3 |
| | குசன் 1-2-4-7-8-10-11 | ,, | 7 |
| | புதன் 3-5-6-11 | ,, | 4 |
| | குரு 6-10-11-12 | ,, | 4 |
| | புகர் 6-8-11-12 | ,, | 4 |
| | சனி 1-4-7-8-9-10-11 | ,, | 7 |
| | லக்கனம் 1-3-6-10-11 | ,, | 5 |
| புதன் பால் 54-க்கு விபரம் | ரவி 5-6-9-11-12 | ஆக | 5 |
| | மதி 2-4-6-8-10-11 | ,, | 6 |
| | குசன் 1-2-4-7-8-9-10-11 | ,, | 8 |
| | புதன் 1-3-5-6-9-10-11-12 | ,, | 8 |
| | குரு 6-8-11-12 | ,, | 4 |
| | புகர் 1-2-3-4-5-8-9-11 | ,, | 8 |
| | சனி 1-2-4-7-8-9-10-11 | ,, | 8 |
| | லக்கனம் 1-2-4-6-8-1011 | ,, | 7 |
| குருபால் 56-க்கு விபரம். | ரவி 1-2-3-4-7-8-9-10-11 | ஆக | 9 |
| | மதி 2-5-7-9-11 | ,, | 5 |
| | குசன் 1-2-4-7-8-10-11 | ,, | 7 |
| | புதன் 1-2-4-5-6-9-10-11 | ,, | 8 |
| | குரு 1-2-3-4-7-8-10-11 | ,, | 8 |
| | புகர் 2-5-6-9-10-11 | ,, | 6 |
| | சனி 3-5-6-12 | ,, | 4 |
| | லக்கனம்-1-2-4-5-6-7-9-10-119. | | |
| சுக்கிரன் பால்-52க்கு விபரம். | ரவி 8-11-2 | ஆக | 3 |
| | மதிக-2-3-4-5-8-9-11-12 | ,, | 9 |
| | குசன் 3-5-6-9-11-12 | ,, | 6 |
| | புதன் 3-5-6-9-11 | ,, | 5 |

| | | | |
|---|---|---|---|
| சுக்கிரன் | குரு 5-8 9-10 11 | ,, | 5 |
| ,, | புகர் 1-2-3 4--5-8-9 10-11 | ,, | 9 |
| | சனி 3-4-5-8-9-10-11 | ,, | 7 |
| | லக்கனம் 1-2-3-4-5-8-9-11 | ,, | 8 |
| சனி பரல் 39-க்கு விபரம் | ரவி 1-2-4-7-8-10-11 | ஆக | 7 |
| | மதி 3-6-11 | ,, | 3 |
| | குசன் 3-5-6-10-11-12 | ,, | 6 |
| | புதன் 6-8-9-10-11-12 | ,, | 6 |
| | குரு 5-6-11-12 | ,, | 4 |
| | புகர் 6-11-12 | ,, | 3 |
| | சனி 3 5-6-11 | ,, | 4 |
| | லக்கனம் 1-3 4-6-10-11 | ,, | 6 |

### வெண்பா

அட்டவர்க்கவிந்திரவிக் காறெட்டாமம்புவிக்கோன்
றெட்டுசனிசெய்முப்பத் தொன்பதாம்-இட்டபுதற்
கைம்பத்துநான்குகுருக் காறெட்டோடெட்டா
மைம்பத்திரண்டு புகர்க்காம்.

இந்தப்படி அந்தந்தக் கிரகங்களுக்குச் சொன்ன பரலை அந்தந்தக் கிரகங்களிருக்கிற வீடுமுதலாகக்கொண்டும் லக்கணத்தைத் தொட்டும் எண்ணிப்போடுவது.

### திரிகோணசோதனை

திரிகோணராசி மூன்றிலும் பரல்சரியாக விருந்தால் மூன்றையும் எடுத்துப்போடவும், ஒரு ராசியிற் குறைந்திருந்தால் அப்படியே மற்றராசிகளின் பரலையும் குறைத்துப்போடவும்; ஒருராசியிற் பரலில்லாதிருந்தால் சோதனையில்லை,

## ஏகாதிபத்தியசோதனை

திரிகோண சோதனையான பின்பு மேஷ-விருச்சிகமும், ரிஷப-துலாமும, மிதுன - கன்னியும், தனுசு-மீனமும், மகரகும்பமுமாகியராசிகளில் கிரகமிருந்த ராசிப்பரல், குறைந்தும் கிரகமில்லாத ராசிப்பரல் அதிகமாகவும் இருந்தால் குறைந்தபடி சரிசெய்யவும். சரியாகவிருந்தாலும் கிரகமில்லாத ராசிப்பரல் குறைந்திருந்தாலும் கிரகமில்லாத ராசிப்பரலை எடுத்துப்போடவும், இரண்டு ராசிகளிலும் கிரகமில்லாமலிருக்கப் பரல் ஏற்றக்குறைச்சலாக வருந்தால் குறைந்தபடி சரிசெய்யவும், சரியாகவிருந்தால் இரண்டுராசிப் பரலையும் எடுத்துப்போடவும்.

இரண்டு ராசியிலும் கிரகமிருந்து பரல் ஏற்றக் குறைச்சலாகவிருந்தாலும் சரியாகவிருந்தாலும் ஒரு ராசியிற் பரலில்லாமலிருந்தாலும் இரண்டு ராசியிலும் கிரகமில்லாமலிருக்க ஒரு ராசியிற் பரலில்லாதிருந்தாலும் சோதனையில்லை. கிரகமிருந்த ராசியில் பரலில்லாதிருச்க மற்றொன்றில் பரலிருந்தால் அதை எடுத்துப்போடவும்.

## இராசி குணகாரம்

ஏகாதிபத்திய சோதனையானபின் நின்ற பரலை ரிஷப-சிங்கத்திற்குப் பத்திலும், மிதுன-விருச்சிகத்துக்கு எட்டிலும், மேஷ-துலாத்துக்கு ஏழிலும், கன்னி-மகரத்துக்கு ஐந்திலும், கர்க்கடகத்துக்கு நாலிலும், தனுசுக்கு ஒன்பதிலும், கும்பத்துக்குப் பதினொன்றிலும், மீனத்துக்குப் பன்னிரண்டிலும், பெருக்கிக் கண்ட மொத்தம இராசி குணகாரமாம்.

## கிரகசுணகாரம்

குருவிருந்த ராசிப்பரலைப் பத்திலும், செவ்வாயிருந்த ராசிபபரலை எட்டிலும் சுக்கிரனிருந்த ராசிப்பரலை ஏழி

லும், மற்றக்கிரகங்கள்நின்ற ராசிப்பரலை ஐந்திலும், பெருக்கிக்கண்டதொகை கிரககுணகாரம்,

இராசிகுணகார கிரககுணகாரத் தொகைகளை ஒன்றாகக் கூட்டினதொகை குணசமூகமாம்,

இதை 7-ல் பெருக்கி 27-க் கீந்தபலன் வருஷமாகவும்.

மிச்சத்தை 12-ல் பெருக்கி 27-க் கீந்தபலன் மாசமாகவும்,

மிச்சத்தை 30-ல் பெருக்கி 27-க் கீந்தபலன் நாளாகவும்.

மிச்சத்தை 6-ல் பெருக்கி 27-க் கீந்தபலன் நாழிகையாகவுங் கொள்க.

இவ்வாறே எல்லாக்கிரகங்கள் கொடுத்தவைகளை ஒன்றாகக்கூட்டிக்கண்ட தொகையில் வருஷம் 1-க்கு 36-நாளும் மாதம் 1-க்கு 3-நாளும், நாள் 1-க்கு 6-நாழிகையும் நாழிகை 1-க்கு 6-விநாடியுங் கழித்துக்கண்ட தொகையில் நீசக்கிரகம் அஸ்தமனக்கிரகம் கொடுத்ததில் மூன்றிலொன்று கழித்து மற்ற விரண்டு பங்கும் நட்பு ஆட்சி மூலத்திரிகோணங்களிலிருக்கும் கிரகங்கள் கொடுத்ததை முழுமையும் உச்சக்கிரகங்கொடுத்ததை இரட்டித்துக்கொண்டும் ஒன்றாகக் கூட்டிக்கண்ட தொகை சாதகனுக்கு ஸ்தூலபரமாயுளாம், செவ்வாய் - சனி - சுக்கிரன் பகைவீட்டிலிருந்தா லவர்களுக்கு மரணமில்லை, மற்றவருக்குண்டு,

இக்கிரகங்கள் தசவர்க்கமேறும்போது சுபவர்க்கமதிகமாக விருந்தால் நல்லபலன் கொடுக்கும், பாபவர்க்கமதிகமாக விருந்தால் பலன்கொடுக்காது, இன்னும் மகா

திசை முதலான திசைகளில் 6-திசை விடுதி ஒருகாலத்தி லிருந்தாலு மாகாது, இவைகளையும் பிராணதேக மிருத் திஸ்புடங்களின் தொகையும் ஆராய்ந்தறிந்து இஷ்ட தேவதையின் வரத்தினாலும் நவக்கிரக சகாயத்தினாலும் குருகடாக்ஷத்தினாலும் நிரியாண காலஞ் சொல்ல வேண்டும்

---

## அஷ்டகவர்க்கபலன்

சர்வாஷ்டவர்க்கப்பரல் 337-ல் ராசி 1-க்கு
30-க்கு மேலிருந்தால் பூரணம்
25-க்கு கீழிருந்தால் மத்திமம்.
20-க்கு கீழிருந்தால் அற்பமாம்.

திரிகோண சோதனைக்குமுன்கிரகம் 1-க்குராசி 1-க்
3-பரலுக்குள்ளிருந்தால் அற்பபலன்
4-பரலிருந்தால் சமபலன்
5-முதல் 8-வரை விசேஷபலனும்.

விபரம் 1-க்கு திரவியநாசம்
2-க்கு அபிமானம், பீடை
3-க்கு சஞ்சலம், வித்தைநாசம்
4-க்கு லக்ஷ்மீகரம்
5-க்கு தன வருத்து
6-க்கு வித்தியாலாபம், லக்ஷ்மீகரம்
7-க்கு ஐசுவரியம்
8-க்கு ராஜயோகமாம்,

பரல் குறைந்திருக்கிற ராசியில் சூரியன் வரும்போது தீமை.

பரல் குறைந்தராசி சூரியனுக்குப் பகை நீசமானல் அதிக நஷ்டம்.

பரல் அதிகப்பட்ட ராசியில் சூரியன் வரும்போது லாபம்.

லக்கனதிபதி லக்கன கேந்திரத்தில் 5-6-பரலுடனிருந்தால் அதிகலாபம்.

சூரியன் 4-கிரகத்துடன் கூடி 5-6-பரலோடு நின்றால் அதிக லாபம்.

உச்சமும் ஆட்சியும் நட்புமாக இருக்கும் கிரகங்கள் 4-பரலுக்கு மேலான பரலுடன் லக்கினகேந்திரம் பெற்றால் அதிராஜயோகமாம்.

சூரியனின்ற ராசிக்கு 9-ம் ராசியின்பரலை எண்ணிக் கண்டதொகை பிதாவின் சகோதரராம். அந்தப்பரல் பெண்கிரகங் கொடுத்ததானல் சகோதரியென்றும் புருஷக்கிரகங் கொடுத்ததானல் சகோதரனென்றும், அலிக் கிரகங் கொடுத்ததானல் சகோதரமில்லை யென்றுங் கொள்ள வேண்டும்.

லக்கன முதல் 4-ராசிப்பரலைக் கூட்டிக் கண்ட தொகை முதற்கண்டமாம்.

5-ம் ராசிமுதல் 8-ம் ராசிவரையில் கூட்டிக் கண்ட தொகை இரண்டாங் கண்டமாம்.

9-ம் ராசிமுதல் 12-ம் ராசிவரையிற் கண்ட தொகை மூன்றாங் கண்டமாம்,

இந்த மூன்று கண்டத்தில்

1-வது அதிகமானல் பாலியத்திலும்
2-வது அதிகமானல் யவ்வனத்திலும்
3-வது அதிகமானல் வயோதிகத்திலும் செளக்கியமாம்.

இராவிழிப்பு ராசிப்பர லதிகமானுல் இராத்திரியிலும், பகல் விழிப்பு ராசிப்பர லதிகமானுல் பகலிலும் வெற்றியுண்டு.

இப்படியே திக்குப்பர லுக்கும் ஆண்பெண் ராசிகளின் பரலுக்கும் உயர்ந்ததைப்பற்றிப் பலன்சொல்லரும் 10-ம் இடம் 12-ம் இடம் பரல் குறைந்தும் 11-ம் பரல் அதிகமாகவுமிருந்தால் ராசயோகம்.

11-ல் பரல் குறைந்தும் 12-ல் அதிகமானுல் வரவுக்கு மிஞ்சின செலவு.

10-ல் பரல் குறைந்தும் 12-ல் அதிகமாகவுமிருந்தால் செய்தொழிலில் லாபமில்லை, இவன் எடுத்த காரியமும் முடியாது

---

## சூரியனஷ்டகவர்க்க பலன்

---

சன்மலக்கினத்திலும் சந்திரலக்கினத்திலும் பரல் குறைந்திருந்தாலும், சூரியன் நீச்சனுகவிருந்தாலும் பிதாவுக்கரிஷ்டம்,

5-ம் 9-ம் ராசியில் 30 க்குக் குறைந்த பரலோடு சூரியனின்ருல் பிதாவுக்கும்,

2-5-ல் 3-பரலோடு சூரியனிருக்க 9-ல் ராகு விருக்கப் பிதாவுக்கும்,

5-ஞுத்தல் நிரியாணம், குறைந்த பரலோடு 5-ல் சூரியன்-சந்திரன்-செவ்வாய்-சனி யிருந்தால் சாதகனுடைய பிதா-மாதா-சகோதரருக்கு அரிஷ்டம்.

---

## சந்திரனஷ்டகவர்க்க பலன்.

சந்திரனின்ற ராசிக்கு 4-ம் ராசிப்பரலை எண்ணிக் கண்ட தொகை மாதா சகோதரர், இதுவும்முன் போலப் பெண்கிரகங் கொடுத்ததும் ஆண்கிரகங் கொடுத்ததுங் கண்டு சொல்லலாம்.

லக்கினத்துக்கு 4-ம் ராசியைக்கொண்டு சொல்வது லக்கினத்திலும், சந்திரலக்கினத்திலும் பரல் அதிகமாக விருந்து அதில் சுபரிருந்தாலும் பார்த்தாலும், அதிபதி பலத்தாலும் மாதாவுக்குத் தீர்க்காயுள்.

ஏகாதிபத்திய சோதனையானபின் சந்திரனின்ற இராசியின் பரலையும் லக்கினமுதல் 4-ராசிப்பரலையும் பெருக்கி 27-ல் கழித்த மிச்சத்தில் பூர்வபட்சத்தில் பிறந்தவனுக்கு அச்சுவினி முதலாகவும்.

அமரபட்சத்தில் பிறந்தவனுக்கு அவிட்டமுத லாகவும்,

எண்ணிக்கண்ட நட்சத்திரத்தில் சனிவருங்காலம் மாதாவுக்குப் பீடை.

சந்திரன் வருங்காலம் சுகம்.

## செவ்வா யஷ்டகவர்க்க பலன்.

செவ்வாய் நின்ற ராசிக்கு 3-ம் ராசிக்கதிபதி நின்ற ராசியின் பரலை யெண்ணிச் சகோதரபலன் சொல்லவும்.

செவ்வாய்நின்ற ராசிக்கு 3-ம் ராசியின் பரலைக் கொண்டு இளையசகோதரஞ் சொல்லவும்,

இதுவு முன்போல ஆண்பெண் கிரகங்களாற் சொல்லவும்,

செல்வாய் நின்ற ராசியின் சோத்தியப் பரலை 3-ம் ராசிப்பரலால் பெருக்கி 27-ல் கழித்து முன்போல வளர் பிறை தேய்பிறை யறிந்து எண்ணிக் கண்ட நட்சத்திரத்தில் சனிவரச் சகோதரபீடை,

குருவரச் சகோதர சவுக்கியம்.

---

புத னஷ்டகவர்க்க பலன்.

---

புதன் கேந்திரத் திரிகோணங்களில் 5-க்கு மேற்பட்ட பரலோடிருக்க குருபார்க்க நல்லவித்தை யுண்டு,

2-க்கு அதிபதி.

5-பரலோடு பகை-நீச்சம் நீங்கினவிடத்திலிருக்க கணிதமும் சிற்பமும் வரும்.

புதனிருக்கும் ராசிக்கதிபதி சுபனுய்க்கேந்திரத் திரிகோணமேற அதில் 5-பரலுக்கு மேலிருந்தால் வித்துவானும்.

---

குரு அஷ்டகவர்க்க பலன்

•••○○•••

குரு நின்ற ராசிக்கு 5-ம் ராசிப்பரல் எத்தனையோ அத்தனை புத்திரருண்டு.

இதையும் முன்போலவே ஆண்பெண் சொல்லவும், லக்கினத்துக்கு 5-ம் ராசியினுலும் சொல்லலாம் குருபலவானுக விருக்கவேண்டும்.

லக்கினத்திலும் 5-ம் இடத்திலும் பாபக்கிரக மிருக்

தால் புத்திர ஹானி.

லக்கினத்துக்கு 5-ல் மூன்று பரலிருந்தால் அற்ப புத்திரயோகம்.

5-ம் ராசி சமுதாயப் பரலை சோத்தியப்பாலாலே பெருக்கி 27-ல் கழித்த மிச்சம் முன்போல் அச்சுவினி அவிட்டமுதலாக வெண்ணிக்கண்ட நட்சத்திரத்தில் குரு வருங்கால் புத்திரருண்டு,

---

## சுக்கிர னஷ்டகவர்க்க பலன்

சுக்கிரனின்ற ராசிக்கு 7-ம் ராசியில் எத்தனை பரலிருக்கிறதோ அத்தனை களத்திரமாம்.

அது சூரியன் கொடுத்த பரலாயின் பிதுர்வர்க்கத்திலும்.

சந்திரன் கொடுத்த பரலாயின் தாய் வர்க்கத்திலும்.

சனி செவ்வாய் கொடுத்த பரலாயின் அன்னிய வர்க்கத்திலும் களத்திர முண்டாம்.

லக்கினத்துக்கு 7-ல் சுக்கிரனிருந்தால் களத்திர பலன்
சனியிருந்தால் ரோககளத்திரம்.
புதனிருந்தால் களத்திரயீனம்.
செவ்வாய் - சூரியனிருந்தால் காந்தருவ களத்திரமாம்.

---

## சனி அஷ்டகவர்க்க பலன்

லக்கினத்துக்கு 8-ம் ராசியிலிருந்த சமுதாயப் பரலை யும் சனி நின்ற ராசியின் சோத்தியபரலை பெருக்கிக்கண்ட தொகை வருஷத்தில் சாதகனுக்குத் தத்து.

ஷை தொகையை 27-ல் கழித்து மிச்சத்தை அச்சுவினி அவிட்ட முதலாக முன்போல் எண்ணிக்கண்ட நட்சத் திரத்தில் சனிவருங்காலம் தேகபீடை.

சனி நின்ற ராசிச் சோத்தியப் பரலையும், லக்கினத் தின் சமுதாயப்பரலையும் பெருக்கிக்கண்ட தொகையை 27-ல் கழித்த மிச்சத்தில் முன்போற்கண்ட நட்சத்திரத் தில் சனிவருங்கால் தேகபீடை.

லக்கினமுதல் சனியிருந்த ராசிவரையிலுமுள்ள ராசி களின் கோத்திறப் பரல்களையும் குளிகனிருக்கிற ராசி முதல லக்கினம் வரையிலுமுள்ள ராசிகளின் சோத்தியப் பரல்களையும் பெருக்கி 27-ல் கழித்து சேடத்தை முன் போல எண்ணிக்கண்ட நட்சத்திரத்தில் சனிவருங்காலம் நிரியாணமாம்.

சோத்திரப் பரலென்றுசொல்லாதவைகள் சமுதாயப் பரலாம்.

சர்வாஷ்டக வர்க்கில் 11-லும் 12-லும் குறைந்து 10-க்கு அதிகப்பட்டால் இராஜயோகமாம்,

10-ல் குறைந்து 12-ல் அதிகப்பட்டால் அதிக செலவு:

11-ல் குறைந்து 10-ல் அதிகப்பட்டால் செய்தொழி லில் லாபமில்லை.

லக்கினமுதல் சனிநின்ற ராசிவரையுள்ள பரலைஎண் ணிக் கண்டதொகை வருஷத்தில் கண்டமுண்டு.

ஏகாதிபத்திய சோதனையானபின் 8-லுள்ள பரலை யும் லக்கினப்பரலையும் பெருக்கி 27 ல் கழித்த சேடத்தை அசுபதி முதலெண்ணிக் கண்ட நட்சத்திரத்தில் சனிவரும் போது கண்டமுண்டு, திரிகோண சோதனையான பின் னும் பார்க்கலாம்.

வளர்பிறையிற் பிறந்தவனுக்கு அசுபதி முதலாகவும் தேய்பிறையிற் பிறந்தவனுக்கு அவிட்டமுதலாகவு மெண்ணிக் காணவும்,

## தசவர்க்கம்.

1-வது கிரகமிருக்கிற ராசிவர்க்கமாம்.

2-வது சூரியசந்திரவோரை.

கிரகமிருந்த ராசியை 2 கூறிட்டது ஓரை.

ஆண் ராசிக்கு 15-பாகைக்குள் சூரியவோரையாகவும், 30-பாகைக்குள் சந்திரவோரையாகவும்.

பெண் ராசிக்கு 15-க்குள் சந்திரவோரையாகவும் 3-க் குள் சூரியவோரையாகவுங் கொள்க.

## 3-வது திரைக்காணம்.

கிரகமிருந்த ராசியை 3-கூறிட்டது திரைக்காணம்,

10-பாகைக்குள் அந்த லக்கினமாகவும்-

20-பாகைக்குள் 5-ம் லக்கினமாகவும்.

30-பாகைக்குள் 9-ம் லக்கினமாகவுங்கொள்க.

## 4-வது திரிம்சாங்கிசம்

திரிம்சாம்கிசம் ஆண் ராசிக்கு

5-பாகைக்குள் செவ்வாயாகவும்.

10-பாகைக்குள் சனியாகவும்.

18-பாகைக்குள் குருவாகவும்.

25-பாகைக்குள் புதனாகவும்.

30-பாகைக்குள் சுக்கிரனாகவும்,

பெண்ராசிக்கு.

5-பாகைக்குள் சுக்கிரனாகவும்,
10-பாகைக்குள் புதனாகவும்.
18-பகைக்குள் குருவாகவும்,
25-பாகைக்குள் சனியாகவும்.
30-பாகைக்குள் செவ்வாயாகவுங் கொள்க.

5-வது சத்தமாங்கிசம்.

கிரகமிருந்த ராசியை 7-கூறிட்டது சத்தமாங்கிசம். ஆண்ராசிக்கு * உதயமுதல் நேரும், பெண்ராசிக்கு 7-ம் ராசிமுதல் நேருமாகக் கொள்ளவும்,

6-வது நவாங்கிசம்.

கிரகமிருந்த ராசியை 9-கூறிட்டது நவாங்கிசம் அந்தக் கிரகங்களின் அங்கிசலக்கினமாகக் கொள்க.

7-வது தசாங்கிசம்.

கிரகமிருந்த ராசியை 10-கூறிட்டது தசாங்கிசம், ஆண்ராசிக்கு உதயமுதல்நேரும் பெண்ராசிக்கு 7-ம் ராசிமுதல் நேருமாகக் கொள்க.

8-வது துவாதசங்கிசம்.

கிரகமிருந்த ராசியை 12-கூறிட்டது துவாதசாங்கிசம்.

ஆண்ராசிக்கு பெண்ராசிக்கும் உதயமுதல் நேரே கொள்க.

9-வது கலாங்கிசம்.

கிரகமிருந்த ராசியை 16-கூறிட்டது கலாங்கிசம், கூறு 1-க்கு 1-ம், கலை $52\frac{1}{2}$-யுமாம்.

* உதயம்-ஜன்மலக்கினம்.

ஆண் ராசிக்கு மேஷ முதல்நேராக 12-ராசியும், பிரமன்-மாயோன்-ருத்திரன்-ரவியாகவும்.

பெண் ராசிக்கு ரவி-ருத்திரன்-மாயோன்-பிரமனாகவும் மேஷம்வரை இடமாகவுங் கொள்க.

## 10-வது சஷ்டியாங்கிசம்.

கிரகமிருந்த ராசியை 6 கூறிட்டது சஷ்டியாங்கிசம், கூறு 1-க்கு 30-கலையாம், இதுவும் ஆண் ராசிக்கு நேராகவும், பெண் ராசிக்குக் கடைசி முதலாகவுங் கொள்க,

| | |
|---|---|
| 1-ரோகம் | 21-கோமலம் |
| 2-இராக்கதம் | 22-பதுமம் |
| 3-தேவபாகம் | 23-லட்சுமி |
| 4-குபேரம் | 24-வாகீஸ்வரம் |
| 5-ரக்ஷாகணம் | 25-திகம்பாம் |
| 6-கின்னரம் | 26-இந்திரம் |
| 7-பிரஷ்டம் | 27-கலியம் |
| 8-குலக்கினம் | 28-நாசபாகம் |
| 9-விஷயம் | 29-பூமிசுரம் |
| 10-கிரீசம் | 30-கமலாகரம் |
| 11-மாயம் | 31-காரகுளிகன் |
| 12-பிரேதபுரி | 32-மந்தாத்திரியம் |
| 13-அபரபதி | 33-அவமிருத்து |
| 14-தேவகணம் | 34-காலமிருத்து |
| 15-ஈசபாகம் | 35-தபாக்கினி |
| 16-காலபாகம் | 36-அகோரம் |
| 17-அக்கினிபாகம் | 37-யமகண்டம் |
| 18-மிருதம் | 38-சுதம் |
| 19-சந்திரம் | 39-ஞாமிர்தம் |
| 20-மிருத்தி | 40-பரிபூரணம் |

41-விஷப்பிரதி
42-குலநாசம்
43-மூர்க்கியம்
44-வம்சக்ஷயம்
45-உற்பாதம்
46-காலரூபம்
47-சௌமியம்
48-மிருத்துவம்
49-சுசீதளம்
50-தமிஷ்டார்க்ம்
51-இந்துலேகம்
52-பிரவீணம்
53-காலாக்கினி
54-தண்டாயுதம்
55-நிர்மலம்
56-சுபம்
57-அதிசீதளம்
58-சுபதாபத்தியம்
59-பிரமாணம்
60-இந்துரேகை

இதனுல் தேவாங்கிசமறியும் விபரம்.

நவக்கிரகங்களுடைய தசவர்க்கங்களை யெல்லாந் தனித்தனிக்கூட்டி ஒவ்வொரு கிரகமேறிய வர்க்கங்களில் இரண்டு சுபவர்க்கங் கண்டால் பாரிசாதம்.

3-க்கு உத்தமாங்கிசம்
4-க்கு கோபுரம்
5-க்கு சிங்காசனம்
6-க்கு பாராவதம்
7-க்கு தேவலோகம்
8-க்கு வைசேஷிகம்
9-க்கு ஐராவதம்
10-க்கு தேவேந்திரமாம்.

இவற்றுள.

1-க்கு துர்ப்பலன்
2-க்கு சுகி
3-க்கு ரோகி
4-க்கு வாகனம் - தனம் பசு விர்த்தியுடையவன்
5-க்கு செல்வன
6-க்கு வித்தை - செல்வம் கீர்த்தியுடையோன்
7 - க்கும்-8 - க்கும் சைநிய பதி-லோகாதிகாரி
9-க்கு அஷ்டைஸ்வரியன்
10-க்கு இந்திரபோகி-சார்வபௌமனுகும்

## துவாதச லக்கின விபரம்.

### 1-வது ஜன்மலக்கினம்.

இது அந்தந்த மாதாாசியின் நாழிகையை ஷெ மாதத் தேதியின் ஈவுப்படி கழித்து நின்ற உதயாபர நாழிகை முதலாகச் சனன காலவரை எண்ணிக்கண்ட நாழிகையில் வரும் லக்கினமாம்.

### 2-வது ஓராலக்கினம்,

இது உதயமுதல் சனனகாலவரை யெண்ணிக்கண்ட நாழிகையை உதயமுதல் இராசி 1-க்கு 2½-நாழிகையாகக் கழித்து கண்ட லக்கினமாம்,

இது ஆண்ராசிக்கு வலமாகவும், பெண்ராசிக்கு இடமாகவும் பார்த்துக்கொள்ளவும்.

### 3-வது கடிகாலக்கினம்

இது உதயமுதல் சனனகாலவரை எண்ணிக்கண்ட நாழிகையை உதயமுதல் ராசி 1-க்கு நாழிகை யொன்றாகக் கழித்துக்கண்ட லக்கினமாம்.

இதையும் முன்போல ஆண்ராசி பெண்ராசிகளுக்குச் சொன்னபடி இடம் வலமாகப் பார்த்துக் கொள்ளவும்.

### 4-வது ஆரூடலக்கினம்.

இது லக்கின முதல் லக்கினாதிபதி நின்ற ராசிவரை எண்ணிக்கண்ட தொகை எத்தனையோ அதை லக்கினாதிபதி நின்றராசி முதலாக எண்ணிக் கண்ட லக்கினமாம்

அவன் லக்கினத்திலும் ஏழிலுமிருந்தால் அவையே ஆரூட லக்கினமாம்.

### 5-வது நட்சத்திரலக்கினம்.

இது சென்ம நட்சத்திரத்திற் சனனவரை சென்ற நாழிகையை ராசி 1-க்கு 5-நாழிகையாகக் கழித்துக் கண்ட லக்கினமாம்.

அச்சுவினி-மகம்-மூலத்துக்கு இடமாகவும், மற்றவைகளுக்கு வலமாகவும், சனனலக்கினமுதல் எண்ணிக் கொள்ளவும்.

### 6-வது காரகலக்கினம்.

இது உதயாதி சென்மவரை சென்ற நாழிகையை ராசி 1-க்கு 5-நாழிகையாகக் கழித்துக் கண்ட தொகையை எந்தக் கிரகஸ்புடத்தில் அதிக பாகை யிருக்கிறதோ அந்தக்கிரகமிருக்கின்ற ராசிமுதலாக எண்ணிக்கண்ட லக்கினமாம்.

### 7-வது ஆதேரிச லக்கினமாம்.

இது சன்மலக்கினத்துக்கு ஏழாம் லக்கினமாம்.

### 8-வது ஆயுர்லக்கினமாம்.

இது உதயாதி சென்றநாழிகையை ராசி 1-க்கு 5-நாழிகையாகக் கழித்துக் கண்ட தொகையை சந்திரனின்ற அங்கிச லக்கினமுதலாக எண்ணிக்கண்ட லக்கினமகம்.

### 9-வது திரேக்காணலக்கினம்.

இது லக்சினத்தை மூன்று கூறிட்டுச் சதுரத்துக்கு 1-5-9-ஆகவும். ஸ்திரத்துக்கு 9-1-5 ஆகவும், உபயத்துக்கு 5-9-1 ஆகவும் எண்ணிக்கண்ட லக்கினமாம்.

### 10-வது அங்கிசலக்கினம்.

இது முன்சொன்ன காரகக்கிரகத்தின் துவாதசாங்கிச லக்கினமாம்.

11-வது நவாங்கிசலக்கினம்.

இது லக்கினத்தை 9-பங்காக்கி எத்தனையாம் பாங்கில் சனனமோ அதை அந்த ராசித்திரிகோணசரராசியாக எண்ணிக் கண்ட லக்கினமாம்.

12-வது பாவலக்கினம்.

இது உதயாதிசென்மவரை சென்ற நாழிகையை ராசி 1-க்கு 5-நாழிகையாகத் தள்ளிக் கண்ட தொகையை மேஷ முதலாக எண்ணிக் கண்ட லக்கினமாம்.

கிரகாவஸ்தை.

லக்கினத்தை 5-கூறு செய்து 1-க்கு வாலிபம் 2-க்கு எவ்வனம், 3-க்கு கௌமாரம், 4-க்கு விருத்தம், 5-க்கு மரணம் எனக்கண்டு ஆண்ராசிக்குப் பாலன் முதலாகவும், பெண்ராசிக்கு மரணமுதலாகவுங் கொள்க. ராகு கேதுக்கு எந்தராசிக்குமிடமாகவேபார்த்துக்கொள்ளவும்,

சனி-ராகு-கேதுக்கு விருத்தாவஸ்தையும்

சுக்கிரனுக்கு வாலிபமும் மரணமுந்தவிற மற்றவஸ்தயும்.

செவ்வாய்க்கு விருத்தமும், மரணந்தவிர மற்றுவஸ்தையும்.

புதனுக்கு மரணந்தவிற மற்றுவஸ்தையும்'

சூரியனுக்கும்-குருவுக்கும் மரணநீங்கிய அவஸ்தைகளும்,

சந்திரனுக்கு எவ்வனமும் உத்தமம், வாலிபமும் கௌமாரமும் மத்திமம், மற்றவைகளும ஆகாவாம்

கிரகசமயம்

மேஷமுதல் சாதகனுடைய சன்மலக்கினம்வரை எண்ணின தொகைக்கும், லக்கினமுதல் அந்தந்த கிரகமிருக்

திற லக்கினம்வரை எண்ணின தொகைக்குப் பெருக்கி 27-ல் கழித்து நின்ற மிச்சத்தையும் அவரவர்கள் திசாவருஷத்தையும் பெருக்கி 27-ல், கழித்து நின்ற மிச்சம் சமயமாம்.

| சமயம்; | பலன். | சமயம் | பலன். |
|---|---|---|---|
| 1-ஸ்நானம் | மத் | 15-கோபம் | சம |
| 2-அலங்காரம் | உத் | 16-தாம்பூலம் | உத் |
| 3-விபூதிசந்தனமிடல் | உத் | 17-இராசாங்கம் | உத் |
| 4-செபம் | உத் | 18-கிரீடம்பூணல் | உத் |
| 5-சிவபூசை | மத் | 19-சலபாணம் | மத் |
| 6-ஔபாசனம் | சம | 20-ஆலிங்கனம் | உத் |
| 7-விஷ்ணுபூசை | சம | 21-சயனம் | மத் |
| 8-பிராமணபூசை | மத் | 22-அமுதபாணம் | உத் |
| 9-நமஸ்காரம் | சம | 23-மதனுலங்காரம் | உத் |
| 10-பிரதட்சணம் | உத் | 24-லீலை | உத் |
| 11-வைசுவதேயம் | உத் | 25-வோகம் | சம |
| 12-அதிதிபூசை | சம | 26-நித்திரை | மத் |
| 13-போஜனம் | உத் | 27-ரத்தின பரீட்சை | உத் |
| 14-புராணப்பிரசங்கம் | உத் | | |

பல்லி-காக்கை-முஞ்சூறு-தும்மல்

எழுவாய்மேஷம் படைபூசல்
இடபங்கடகங் குடிபோக்கும்
கழுவாய் மிதுன நல்வசனம்
நண்டுவிருந்து களிப்பாகும்
கழிவையாகுந் தனுஞ்சிங்கம்
கன்னிபழங்காய் வெற்றிலையாம்
தொழுதேதூதன் றுலாமாகும்
தூங்குந்தேள்பொன் பெண்வருத்தே.

வில்வில்விருந்து மிகவுண்டு
வேண்டுமகரம் வீண்ணமுதம்
நல்லகும்ப னோயுண்டாம்
நாட்டுமீனங் களிப்பாகும்;
அல்லிற்சிறந்த குழன்மடவா
யறியச்சொன்னே மவனிமிசை
சொல்லும்பல்லி கொடிகூரன்
தும்மலென்றே யறிவாயே.

பதினாறுக்குப் பல்லிக்காதல்.

அருக்கன்மேற் பயநாசம் ரெண்டிற்சாவு
அகன்றவர்பின் மீண்டிடுவார் மூன்றேயாகில்
உருக்கமுள்ள சாவதனைக் கேட்கநாலு
ஒருசண்டை யுண்டைந்தா மூறவாமாறு
விரிதலையு மழுகுரலு மழையுநோயு
மென்மேலுந் துக்கமுண் டாகமேழு
தரித்திடுபூச் சந்தனமு மணமுங்கொண்டு
தகுதியுள்ளார் கூடிவர லாகுமெட்டே
சித்தமிக மகிழ்ச்சியுண்டா நாலோடைந்து
தீதாக வேயுரைக்குந் தெரியுபத்து
அத்தமிசை யாத்திரைகா ணூறோடைந்து
அகமகிழ்ச்சிக் கலியாண மாறோடாறு
பத்திவருங் காணிக்கை பதின்மூன்றிற்குப்
பறந்துவரு மிழவோலை பதினாலுக்கு
மெத்தவரு முறவின்முறை யேழுமெட்டு
மென்மேலும் யோகமுண்டாம் பதினாறுக்கே.

ஆந்தைசகாதல்.

ஒருரையுரைக்குமாகி லுற்றதோர்சாவுசொல்லும்
ஈருரையுரைக்குமாகி லெண்ணியகருமநன்றும்

மூவுரையுரைக்குமாகில் மோகமாமங்கைசேர்வன்
நாலுரையுரைக்குமாகில் நாழியிற்கலகஞ்சொல்லும்
ஐந்துரையுரைக்குமாகிலங்கொரு பயணஞ்சொல்லும்
ஆறுரையுரைக்குமாகி லடுத்தவர்வரவுசொல்லும
ஏழுரையுரைக்குமாகி லிறந்தபண்டங்கள்போகும்
எட்டுரையுரைக்குமாகில் திட்டெனச்சாவுசொல்லும்
ஒன்பதும்பத்துமாகி லுத்தமமிகவுநன்றே.

சகுனம்.

| | | |
|---|---|---|
| வலியன் | கழுகு | கீரி |
| கருடன் | உடும்பு | குரங்கு |
| கட்டுக்காடை | ஆந்தை | |

வலமிருந்து இடமாகப் போகவேண்டும்

| | | |
|---|---|---|
| நாரை | கிளி | ஓணான் |
| விச்சுளி | கொக்கு | புள்ளிமான் |
| காக்கை | மயில் | புனுகுபூனை |
| செம்போத்து | கோழி | புலி, நரி |

இடமிருந்து வலவாகப் போகவேண்டும்.

பாம்பு-பூனை-முசல்-நறுக்கலாகாது.

சுபசகுனங்கள்.

| | | |
|---|---|---|
| குடை | யானை | கன்னிகை |
| கொடி | குதிரை | நிறைகுடம் |
| சாமரை | பசுக்கள் | பழங்கள் |
| கரும்பு | பட்சிக்கூட்டம் | செந்தணல் |
| அக்ஷதை | சலவைவஸ்திரம் | இரட்டைப் பிரா [மணர் |
| மாமிசம் | மங்கலவாத்தியம் | |
| தயிர் | புஷ்பம் | சாதும் |
| கள் | மணக்கோலம் | அரசன் |

| | | |
|---|---|---|
| தேன் | சுபவரிசை | முத்து |
| பொரி | தாசி | ——— |
| ரிஷபம் | சுமங்கலை | |

சிலர் பால் சுபசகுன மென்பர்.

அசுப சகுணங்கள்.

| | |
|---|---|
| பயித்தியக்காரர் | கணக்கன் |
| குருடர் | கணக்கோலை |
| நொண்டி | சந்நியாசி |
| விரூபிகள் | சடாதரி |
| விறகுகட்டு | நம்பி |
| மொட்டைத்தலை | தூரஸ்திரீ |
| விரிதலை | அமங்கலை |
| எண்ணெய்த்தலை | அலி |
| நோயாளி | எண்ணெய்க்குடம் |
| அம்பட்டன் | பால் |
| வாணியன் | பயங்கார வேஷதாரி |
| தட்டான் | அரிவாள் |
| ஒற்றைப்பிராமணன் | கோடாலி |
| இரட்டைச் சூத்திரர் | கடப்பாறை |
| மூன்று கோமுட்டிகள் | புதுப்பானை |

மூஞ்சூரின் சத்தம், வேத ஓசை, கழுதை, குதிரைகள் கூப்பிடுதல், நாய் உதறல், ஆந்தை கிளைகூட்டல் உத்தமம்.

| | |
|---|---|
| அழுகுரல் | காலிடறல் |
| ஒற்றைக்குரலோசை | தலைதட்டல் |
| பன்றியுறுமல் | உண்டுபோவெனல் |
| அபானவாயுபறிதல் | போகாதே எனல் |
| கொக்கரித்தல் | கூடவருகிறேனெனல் |
| ஓங்காரம்போடல் | அகாலமழை, தூறல் ஆகாது. |

உபவாசகாலத்திலும், க்ஷெளரஞ் செய்துக்கொண்டும், பெண்சாதியோடு சொல்லிக்கொண்டும், அவள்கையிற் றும்பூலம் வாங்கிக்கொண்டும் பிரயாணம் போகலாகாது.

குணப்பரிகாரம்.

பாப்பூருப்பாம்பும் பனைமரத்துப்பல்லியுந்
தோப்புக்குளாந்தை சிறியதும்-தாப்புக்குள்
ஆட்டுக்குக்கீழ்வலிய ஞானக்குமேல்வலியன்
பாட்டுக்குள்வேண்டாம் பயன்.

இதுவுஞ் சகுனபலன்.

கூரையிற்காகங் கூப்பிடுகருடன்
நாழிகைவலியன் நாளொன்றுநரையான்
போத்துச்சகுனம் போகிறவரைக்கும்.

5-அடி வைப்பதற்குள் காக்கை சகுனமும்,
கூப்பிடுதூதுவரை கருடன் சகுனமும்,
ஒருநாழிகை தூரவரை வலியன் சகுனமும்,
ஒருநாள்வரை நரையான் சகுனமும், செம்போத்து சகுனமும்,

போமிடம்வரைக்கும் பலனும்.

பஞ்ச சகுனம் பார்க்கும் நாள்.

விஜயதசமியின் காலையில் பரிசுத்தனாக நித்திய கர்ம முடித்துப் பட்டுடுத்திக்கொண்டு வடக்கில் 3-ம் ஊர் எல்லைவரை போகும்போது கருடன்-வலியன் கட்டுக்காடை இடமாகவும், செம்போத்து-விச்சுளி வலமாகவுமாகிய இவ்வைந்துஞ் சகுனமாயின் 12-மாதம் வரை சகல நன்மையுமுண்டு.

இவற்றுள் 4-ஆயில் 9-மாதமும்,
3-ஆயில் 4-மாதமும்,

2-ஆயில் 4-மாதமும்,

1-ஆயில் 2-மாதமும் பலனுண்டாம்,

ஆயினும் முறையே ஒன்று - முக்கால் - அறை - கால் அரைக்கால் ஆக பலனுண்டு, சூனியமாயின் பலனில்லை. சிலர் காக்கை நரையானையுங் கூட்டிச் சப்த சகுனமென்பர்.

| | |
|---|---|
| கருடன் | வதிஷ்டர் |
| வலியன் | பரத்துவாசர் |
| கட்டுக்காடை | கௌதமர் |
| செம்போத்து | தூருவாசர் |
| விச்சுளி | காசிபர் |
| காக்கை | புலத்தியர் |
| நரையான் | நாசிதர் |
| மயில் | அகஸ்தியர் |
| கிளி | விஸ்வாமித்திரர் |

எனவறிக.

தேங்காய்ச் சகுனம்.

ஒருகாரியங் தொடங்கும்போது விநாயகருக்கு முன் பரிசுத்தராகப் போய்த் தேங்காயுடைத்துச் சகுனம் பார்க்கவும்.

கவி

முடிசிறுத்துவட்டமிடிற் றிருவந்தெய்தும்
 மூன்றிலொருபங்குடைந்தா லினச்சந்தோஷம்
நெடியவொருவைந்திலொன்று தொலையாச்செல்வம்
 நீணரம்பினறுகோண நிதானவாழ்வு

அடியதனுள்வெடித்திட்டால் ரத்னஞ்சேரும்
அடித்துடைக்கினிரண்டுசம னகண்டபூசை
அடியவருக்கிடரறுக்கு மறன்றன்மைந்த
னைங்கரனுர்முன்றேங்காய்ச் சகுனப்பாரே.
ஆணிமுடிதானிரண்டு கூறதானல்
அக்கினியார்பொருளுக்குச் சேதமாகும்
பேணியதிலோடுடனே தெரித்துவிழ்ந்தால்
பிணியாதேவாதையுண்டு பொருளுஞ்சேதம்
நீணியதோர்கண்தெ"த்தால் மரணமாகும்
நீளமதால்ப்பிளந்துவிட்டா ளிதியுஞ்சேதந்
தாணுவிலேதவறிவிடின் குடும்பநாசந்
தந்திமுகன்முன்தேங்காய்ச் சகுனம்பாரே.

சிலர் ஏறுபொழுதில் பரிசுத்தராக ஏற்றமிறைக்கு மிடத்திற்குப்போய் 60-பாணைக்குமேல் பாடுவது நல மாயின் உத்தமமென்றும், தீதாயின் ஆகாதென்றுஞ் சொல்வர்.

எழுத்தாணி நூல்.

ஆதிமுனிசொன்ன வளமேயெழுத்தாணி
சோதிபெருவிரலாற் ருெட்டளந்து-நீதியுடன்
ஆறிற்பெருக்கியே யாமேழிற்கீந்தமிச்சந்
தேறிப்பொருளுறைப்ப தே,
ஏகஞ்சதிமரணம் ரெண்டோதனபதியாம்
ஆகமிகுநோய்சேரு மூன்றுமே-போகம்
பொருள்சேருநான்கு போர்வெல்லுமைந்து
அருளாமேழ் நாசமா றே.

எழுத்தாணியைப் பெருவிரலா லளந்து 9-ல் பெருக்கி 7-ல் கொடுத்த மிச்சம் 1-க்கு மனைவி மரணம், 2-க்கு சம்பத்து, 3-க்கு ரோகம், 4-க்கு லாபம், 5-க்கு சத்துரு நாசம், 6-க்கு நாசம், 7-க்கு நலம்.

வணக்கவிதி நின்று வணங்க.

திரிமூர்த்திகளுக்குஞ் சிரசின்மேல் 12-அங்குல முயர்த்திக் கைகூப்புதல், மற்றைய தேவர்களுக்குச் சிரசின்மேற் கைகூப்பி வணங்குதல்.

குருவுக்கு நெற்றியில் கைகூப்பி வணங்குதல்,
அரசருக்கும்-பிதாவுக்கும் வாய்க்கு நேர் கைகூப்பி வணங்குதல்

அந்தணருக்கு மார்பில் கைகூப்பி வணங்குதல்.
தாய்க்கு வயிற்றில் கைவைத்து வணங்குதல்.

தண்டாகாரமாக வணங்குதல்.

மாதா-பிதா-குரு தெய்வங்களுக்கு மாத்திரம் அஷ்டாங்கமும் நிலத்திற்படும்படி வணங்குதல்.

மற்றையோருக்குத் தண்டாகாரங்கூடாது.

பெண்கள் முன் சொன்னவர்களுக்கும் முக்கியமாய்க் கணவனுக்கும் ஐந்தங்கங்களும் நிலத்திற்படும்படி வணங்குவதாம்.

சீதா சக்கரம்.

இந்தச் சக்கரத்தில் தொடச்சொல்லிப் பலன் சொல்லவும்.

1-தனலாபம்
2-நாசம்
3-சிநேகம்
4-பீடை
5-க்ஷேமம்

| | | |
|---|---|---|
| 8 | 3 | 4 |
| 1 | 5 | 9 |
| 6 | 7 | 2 |

6-கலகம்
7-தனம்
8-மரணம்
9-சந்தோஷம்

## ஸ்ரீராமசக்கரம்.

இந்தச் சக்கரத்தில் தொடச்சொல்லி பலன் சொல்லவும்.

1-ஸ்தானநாசம்
2-துக்கம்
3-காரியசித்தி
4-லாபம்
5-மரணம்
6-குலட்சயம்
7-ராஜாங்கம்
8-பந்துதரிசனம்

| | | | |
|---|---|---|---|
| 9 | 16 | 5 | 4 |
| 7 | 2 | 11 | 14 |
| 12 | 13 | 8 | 1 |
| 6 | 3 | 10 | 15 |

9 கலியாணம்
10-நாசம்
11-சர்வலாபம்
12-தீர்க்காயுசு
13-கலகம்
14-சுகம்
15-நன்மை
16-க்ஷேமம்

## வார பஞ்சபட்சி.

| | |
|---|---|
| ஞாயிறும்-செவ்வாயும் | வல்லூறு |
| திங்களும்-புதனும் | ஆந்தை |
| வியாழம் | காக்கை |
| வெள்ளி | கோழி |
| சனி | மயில் |

## எழுத்துப்பட்சி.

| | | | |
|---|---|---|---|
| அ-ஆ | வல்லூறு | எ-ஏ-ஐ | கோழி |
| இ-ஈ | ஆந்தை | ஒ-ஓ-ஔ | மயில் |
| உ-ஊ | காகம் | | |

## பல்லி விழும்பலன்.

| | | | |
|---|---|---|---|
| தலையில் | கலகம் | கழுத்து | பகைநாசம் |
| புருவ மத்தியம் | ராஜநேசம் | வலதுதோள் | ஆரோக்கியம் |
| மேலுதடு | விரயம் | இடது தோள் | ஸ்ரீபோகம் |
| கீழுதடு | லாபம் | வலது மணிகட்டு | பீடை |
| மூக்கு | ரோகம் | இடது மணிக்கட்டு | மேன்மை |
| வலது காது | ஆயுள்விருத்தி | ஸ்தானம் | பீடை |
| இடதுகாது | வர்த்தகலாபம் | வயிறு | தானியலாபம் |
| கண்கள் | சிறைப்படல் | மார்பு | லாபம் |
| முகவாய்க்கட்டை | அரசபயம் | தொப்புள் | ஆபரணலாபம் |

| | | | |
|---|---|---|---|
| இரண்டு பக்கமும் | லாபம் | முழங்கால் கணைக்கால் | சுகம் |
| தொடைகள் | தாய்தந்தை [யர்க்குப் பீடை | பாதம் | அலைச்சல் |
| புட்டம் | சுகம் | குதம் } | வறுமை |
| நகம் | பொருட்சேதம் | குய்யம் } | மரணம் |
| | | மயிர் } | |

எண்ணெயிட நாள்.

அருக்க னெண்ணெ யழகழிக்கும்
அணியார் திங்களாகாது
திருக்காஞ் செவ்வா யுயிர்போக்குஞ்
செய்ய புதனற் பொருளுண்டாம்
கருத்தை யழிக்குங் கவின்வியாழம்
கைப்பொருள் போக்குங் கனவெள்ளி
பெருக்க முண்டாஞ் சனியெண்ணெய்
பேணன் முழுக வல்லாரே.

பரிகாரம்.

எண்ணெயிடலாகா விருங்கிழமைதன்னிலே
எண்ணெயிடவேண்டியிருந்தாக்கால்-விண்ணியலும்
ஞாயிறுபூசெவ்வாய்மண் ணல்லவியாழம்மறுகு
நேயவெள்ளி நீறிடுகவே.

எண்ணெயிடலாகாத வாரங்களிலே அவசியம்
எண்ணெயிடவேண்டியிருந்தால்

ஞாயிறு - பூ, செவ்வாய் - மண், வியாழம் - அறுகு,
வெள்ளி-திருநீறு எண்ணெயிற்சேர்த்து இடவும்,
சித்திரையசனமெண்ணெய் நிறைமயிர்ச்சவரநான்கு
உத்தமங்கிழக்குநன்று மோங்குயிர்வளருந்தெற்குச்
சித்தமேகலங்குமேற்குத் திசைகேடுநாலுமூலை
அத்தமுமகமும்போக்குமானதார்வடக்குத்தானே

நித்திரை, போசனம், எண்ணெயிடல், க்ஷவரம் இவை நான்குக்கும் கிழக்கு உத்தமம். தெற்கு - ஆயுள் விர்த்தி, மேற்கு மனவருத்தம், வடக்கு பொருளும் வீடு முதலியவும் போக்கும், மற்ற மூலைத் திசைகள் கேடுதரும்

பாலாரிஷ்டமறிய

ஒருவர்முகம் ஒருவருக்குக் காணப்படுங்காலமுதல் சூரியமண்டலத்தின் அர்த்தோதய சமயவரையுள்ள இரண்டு நாழிகை வரையும் காலைச்சந்தியாம்.

சூரியமண்டலத்தின் அர்த்தாஸ்தமய சமய முதல் நக்ஷத்திரப்பிரகாசங் காணப்படுங் காலவரையுள்ள இரண்டுநாழிகைவரையும் மாலைச்சந்தியாம்.

இந்தச் சந்தியாகாலங்களில் சந்திரவோரை ஜனன காலமாய் எந்த இராசிகளிலாயினும் கடைசி நவாம்சை யைப்பெற்ற பாபிகளால் பிறந்தமகவு பிழைத்திராது.

கேந்திரங்களாகிய இலக்கினசதுர்த்த சத்தமதசமங் களில் மூன்று பாபிகளும் சந்திரனும் ஒவ்வொரு கானத்து ஒவ்வொருவராயிருந்தால் பிறந்தகுழவி பிழைத்திராது.

இலக்கனத்தில் எத்தனை பாகைகள் கழிந்தனவோ அத்தனை பாகைகளையும் தசமபாவத்திற் கழித்து கழிபட வேண்டிய பாகைகளெத்தனையோ அவற்றைத் தசமத் திலும்,

ஏகாதச துவாதச லக்கண துவிதீப திரிதீபங்களிலும்

சதுர்த்தத்தில் இலக்கனத்தில் எத்தனை பாகைகள் கழிந்தனவோ அத்தனைபாகைகள் வரையிலும் சக்கர பூர்வார்த்தமென்றும்,

